சேசுவின் இராச்சியம் வரும்படியாக மாதாவின் இராச்சியம் வருக!
- அர்ச். லூயிஸ் மரிய மோன்போர்ட்



"நீயாவது எனக்கு ஆறுதலளிக்க முயற்சி எடு."

# மாதா பரிகார மலர்

மே & ஜூன் - 2024
மலர் 45 இதழ் 5 & 6
வருடச் சந்தா ரூ. 150.00
தனிப்பிரதி ரூ.20.00

"சேசு மரியாயின் திரு இருதயங்கள் எங்கும் சிநேகிக்கப்படுவதாக."

# மோட்சத்தை அடைய நாம் செய்ய வேண்டியவை

1. மோட்சத்தின் மேல் ஆசை கொள்ள வேண்டும். அந்த ஆசை நம்மிடம் எப்படி விளையும்? மோட்ச பாக்கியத்தை அடிக்கடி நினைக்கிற நினைவின் மூலம்தான். அர்ச். பிரான்சிஸ் அசிசியார் இதைக் குறித்து: "என்ன நோய், என்ன தீமை எனக்கு வந்தபோதிலும், அதை மிகுந்த சந்தோஷத்தோடு நான் அங்கீகரித்துக் கொள்கிறேன். ஏனெனில், அதன் மூலமாக அளவற்ற மகிமையும், பாக்கியமும், மோட்சத்தில் எனக்குக் கிடைக்கும் என்று எனக்குத் தெரியும்" என்றார். அவரைப் போல் அடிக்கடி மோட்சத்தை நினைப்போமாகில், அவரைப் போல சோதனையில் தைரியமாயிருப்போம்.

2. மோட்சத்தை அடைவதற்கு சரீர ரீதியான கெட்ட ஆசைகளை அடக்க வேண்டும். மோட்சம் சம்மனசுக்களுடைய வசிப்பிடமாதலால், அவர்களைப் போல நடந்தால்தான் அவர்களுடைய நாட்டில் நுழையத் தகுதி பெறுவோம்.

3. மோட்சத்தைச் சம்பாதித்துக்கொள்ளப் பிரயாசைப்பட வேண்டும். (அதற்காக முயற்சியெடுக்க வேண்டும்.) பலவந்தம் பண்ணுகிறவர்களே அதை அடைவார்களென்று சேசுநாதர் திருவுளம் பற்றுகிறார். எது விஷயத்தில் பலவந்தம் பண்ணுவது? பாவத்தை விலக்குவதிலும், புண்ணியத்தைச் செய்வதிலும், அதாவது கடவுளுக்குப் பிரியமானதைச் செய்து, அவருக்குப் பிரியமில்லாததை விலக்குவதிலும், எப்போதும் ஆத்துமத்தை எதிர்த்து நிற்கும் சுய நேசத்தைப் பலவந்தம் பண்ணி, அதை அடக்கி ஒடுக்க வேண்டும்.

4. மோட்சத்தைச் சம்பாதிக்கும் முயற்சியில் நாம் சோர்வுறாமல் இருக்கப் பிரயாசைப்பட வேண்டும். சில நாட்கள் அல்லது சில மாதங்கள் அல்லது சில வருடங்கள் சுயத்தை எதிர்த்துப் போராடுவது போதாது. சாகும் வரையில் நம்மையே நாம் அடக்கியாள வேண்டும். அதாவது, எந்த ஒரு குறிப்பிட்ட வயது வரையிலும் அல்ல, மாறாக, கடவுள் நம்மை இவ்வுலகத்தினின்று அழைக்கும் நாள் வரைக்கும் நாம் நம் ஆத்தும எதிரிகளோடு செய்யும் போராட்டத்தில் சற்றும் சோர்ந்து போகாதிருக்க வேண்டும்.

5. மோட்சத்தை அடையத்தக்கதாய் அர்ச்சியசிஷ்டவர்கள் செய்த புண்ணியங்களையும், அவர்கள் எடுத்த முயற்சிகளையும் அடிக்கடி நினைப்பது மிக நல்லது. அப்போதுதான் அவர்களைக் கண்டுபாவிக்க (பின்பற்றி நடக்க) தைரியம் கொள்வோம்.

6. இவ்வுலகப் பொருட்களையும், சுகங்களையும் வீண் என்று நிச்சயிப்பது, மோட்சத்தைச் சம்பாதிக்கப் பெரிய உதவியாக இருக்கும். உள்ளபடி, உலக நன்மைகளை எத்தனை நாள் அனுபவிப்போம்? கொஞ்ச நாள்தான். நோயோ, வீட்டில், அலுவலகத்தில் பிரச்சினையோ, இவையெல்லாம் இன்னும் சிறிது காலம் தான்! நித்தியப் பேரின்பத்தை எப்போதும் சிந்திக்கும்போது, இவற்றின் பாரத்தை நாம் உணர மாட்டோம்.

7. இவ்வுலக நன்மைகளைச் சாகிற நேரம் வரை அனுபவிப்பதால் என்ன பிரயோசனம்? அவை ஒன்றுமில்லாமையே. நாம் நூறு வயது வாழ்ந்தாலும், நித்தியமாகிய கடலுக்கு முன் அது ஒரு துளி மட்டுமே!

ஆதலால் இவ்வுலகப் பொருட்களையும், இடங்களையும், இவ்வுலக மகிமைகளையும் பற்றி நித்தியப் பேரின்ப வாழ்வைப் போக்கடிப்பது மகா பெரிய பைத்தியம் என்று அடிக்கடி யோசித்துப் பார்த்து நம்மையே மாற்றிக் கொள்வோமாக!

குறிப்பு: மே மாதம் பள்ளிகளுக்கு விடுமுறையாதலால் உங்கள் பிள்ளைகளுக்கு இப்படிப்பட்ட நாட்களில் கத்தோலிக்க வேத சத்தியங்களைப் படிப்பித்து, தேவமாதா மற்றும் அர்ச்சியசிஷ்டவர்கள் பற்றியும் எடுத்துச் சொல்லுங்கள். நீங்களும் இந்தக் காலத்தில் அதிகமான ஞானப் புத்தகங்களை வாசியுங்கள். மே மாதம் தேவமாதாவின் வணக்க மாதம். தினமும் உங்கள் இல்லங்களிலும், தெருக்களிலும், தேவமாதாவைப் புகழ்ந்து வாழ்த்துங்கள். ஜெபமாலையும், தேவ மாதாவின் பிரார்த்தனையையும் ஜெபித்து, அவர்களை மகிமைப்படுத்துங்கள்.

# “உரோமாபுரி தன் விசுவாசத்தை இழக்கும்!”



*1846,* செப்டம்பர் 19 அன்று, பரிசுத்த தேவமாதா பிரான்ஸிலுள்ள ல சலேத்தில், மாக்ஸிமின், மெலானீ என்ற இரு குழந்தைகளுக்குக் காட்சியளித்தார்கள். பல தீர்க்கதரிசனங் களிடையே மாமரி, “உரோமை தன் விசுவாசத்தை இழக்கும்; அது அந்திக்கிறீஸ்துவின் ஆசனமாகும்” என்னும் பயங்கரமுள்ள ஒரு தீர்க்கதரிசனத்தையும் வெளியிட்டார்கள். இன்று வரை மறைக்கப்பட்டிருக்கிற பாத்திமாவின் மூன்றாம் இரகசியத் தோடு இந்தத் தீர்க்கதரிசனம் நெருங்கிய தொடர்புள்ளது என்பதில் சந்தேகமில்லை. ஏனெனில் பாத்திமாவில் மாதா ரஷ்ய அர்ப்பணத்தைப் பற்றிய தனது இரகசியத்தின் இரண் டாம் பாகத்தின் முடிவில், “போர்ச்சுக்கலில் விசுவாச சத்தியம் எப்போதும் பாதுகாக்கப்படும்” என்று அறிவித்தார்கள். முதல் இரண்டு இரகசியங்களில் இல்லாத விசுவாச சத்தியம் என்ற வார்த்தையின் மூலம், இதுவே மூன்றாம் இரகசியத்தின் முதல் வாக்கியம் என்பதையும், இந்த இரகசியம் நவீன உரோமையின் விசுவாச இழப்பால், கத்தோலிக்க உலகம் முழுவதும் பரவ இருந்த ஒரு விசுவாச மறுதலிப்பையும், அதற்கு மருந்தாக கத்தோலிக்கத் திருச்சபை மரியாயின் மாசற்ற இருதயத்திற்கு அர்ப்பணிக்கப்பட வேண்டும் என்ற பரிசுத்த பாத்திமா ஜெபமாலை மாதாவின் வேண்டுகோளையும் பற்றிப் பேசுகிறது என்று நாம் எளிதாக ஊகிக்கலாம்.

*1884,* அக்டோபர் 13, பாப்பரசர் 13ஆம் சிங்கராயர் கண்ட பயங்கரக் காட்சியில் பசாசு நம் ஆண்டவரிடமே அவருடைய திருச்சபையை அழிப்பதாக சவால் விட்டு, அதற்குத் தனக்கு 75 முதல் 100 ஆண்டுக் காலம் வேண்டுமென்று கேட்டான். அது அவனுக்கு அனுமதிக்கப்பட்டது. சரியாக 75 ஆண்டுகள் கழித்து (1884 + 75) 1959-ஆம் ஆண்டில், முதல் நவீனவாதப் பாப்பரசரான 23-ஆம் அருளப்பர் ஒரு பொதுச் சங்கத்தைத் தாம் கூட்ட விரும்புவதாக அறிவித்து, அதற்கான ஆயத்தப் பணிகள் தொடங்கப்படக் கட்டளையிட்டார். அவரது விருப்பப்படி, 1962-ல் தொடங்கி 1965-ல் முடிந்த இரண்டாம் வத்திக்கான் சங்கம், “மனுமகன் இரண்டாம் முறை வரும்போது, பூலோகத்தில் விசுவாசத்தைக் காண்பார் என்று நினைக்கிறாயோ?” என்னும் நம் ஆண்டவரின் தீர்க்கதரிசனம் நிறைவேறும் விதமாக, திருச்சபையின் விசுவாசத்தைப் பெருமளவுக்கு அழித்து, அந்திக் கிறீஸ்துவின் ஆட்சியைத் தொடங்கி வைத்த முக்கியமான ஞான அணு ஆயுதமாக இருந்தது.

இச்சங்கத்தில் நான்கு முக்கியத் தப்பறைகள் “அதிகாரபூர்வமாகத்” திருச்சபையில் அறிமுகப் படுத்தப்பட்டன. அவை பிரெஞ்சுப் புரட்சியின் நாத்திக நோக்கங்களை அடிப்படையாகக் கொண் டிருந்தன. அவை: அதன் முதல் நோக்கமான “சுதந்திரத்தை” (Liberty) அடிப்படையாகக் கொண்ட “மதச் சுதந்திரம் மற்றும் மனச் சுதந்திரம் ” (Religious liberty and Liberty of conscience), இரண்டாவது நோக்கமான “சமத்துவத்தை” (Equality) அடிப்படையாகக் கொண்ட பாப்புத்துவ-மேற்றிராணித் துவ சமத்துவம் (Collegiality) மற்றும் மூன்றாம் நோக்கமான “சகோதரத்துவத்தை” (Fraternity) அடிப் படையாகக் கொண்ட ஒரு போலியான “கிறீஸ்தவ ஒன்றிப்பு” (false ecuminism) ஆகியவையாகும்.

இந்தத் தப்பறைகளின் மூலம் கத்தோலிக்கப் பாரம்பரிய விசுவாசமற்றதும், கிறிஸ்துநாதர் தந்த நோக்கமாகிய தேவ மகிமையையும், ஆன்ம இரட்சணியத்தையும் அடியோடு மறந்துவிட்டு,

அல்லது புறக்கணித்துவிட்டு, ஒரு புதிய "பலித்தன்மையற்ற" மனித வழிபாட்டுடனும், புதிய ஞான உபதேசத்துடனும், புதியதொரு வேதாகமத்துடனும், புதிய, பதித போதகங்களுடனும், ஒரு புதிய பாதையில் ஆத்துமங்களை நரகத்தை நோக்கி இட்டுச் செல்வதும், இருபதாம் நூற்றாண்டு மனிதனைத் தன் வழிபாட்டின் மையமாகக் கொண்டதுமான ஒரு "சங்கச் சபை" தோன்றியுள்ளது. இதைக் குறித்து ஆறாம் சின்னப்பர், "மனிதனாய் அவதரித்த கடவுளின் மதம் (அதாவது, பாரம்பரிய கத்தோலிக்கத் திருச்சபை), கடவுளாக ஆக்கப்பட்டுள்ள மனிதனின் மதத்தை (இரண்டாம் வத்திக்கான் சங்கத்தில்) சந்திக்கிறது. என்ன (தீமை நடந்து விட்டது?)" என்ற பயங்கரமான வார்த்தைகளைக் கூறினார் (DC 1966, pp. 63 et seq.). இந்தச் சங்கச் சபையே இன்று அதிகாரத்துடன் செயல்பட்டுக்கொண்டிருக்க, தனது 2000 ஆண்டுகாலப் பாரம்பரியத்தைக் கைவிடாமல், சங்கச் சபையின் "கலாபனைக்கு" உள்ளானாலும், தன் விசுவாசத்தை இழந்து விடாமல், அதைப் பாதுகாத்து வரும் "சத்தியத் திருச்சபை" ல சலேத் தீர்க்கதரிசனத்தின்படி "மறைந்திருக்கிறது." சேசுநாதரின் திருச்சரீரம் அவரது திருப்பாடுகளுக்கும், திரு மரணத்திற்கும் பிறகு கல்லறையில் மூன்று நாட்கள் மறைந்திருந்தது போலவே, இன்று சிலுவை சுமந்துகொண்டு, தன் கல்லறையை நோக்கிச் சென்று கொண்டிருப்பதாகத் தோன்றுகிற சத்தியத் திருச்சபையும், அவரைப் போலவே ஒரு நாள் முன்பை விட அதிக மகிமையோடு உயிர்த்தெழும் நாளுக்காக மன்றாடுவோமாக.

ஆக, சத்திய விசுவாசம் மறைக்கப்பட்டு விட்டது. "ஒரு விசுவாச சத்தியத்தை மறுதலிப்பது, சகல சத்தியங்களையும் மறுதலிப்பதற்குச் சமமானது" என்பதையும், சத்தியத் திருச்சபையால் பிரகடனம் செய்யப்பட்டுள்ள எந்த ஒரு விசுவாச சத்தியத்தையும் மறுதலிப்பவன் தானாகவே திருச்சபை விலக்கத் தண்டனைக்கு (Latae Sententiae-Automatic Excommunication) உட்பட்டு, நித்திய ஜீவியத்தை இழக்கும் ஆபத்தில் இருக்கிறான் என்பதை மறந்தவர்களாக இன்று நவீனத் திருச்சபையின் ஞான அதிகாரிகளும் கூட, பகிரங்கமாகப் பெரும்பாலான விசுவாச சத்தியங்களை மறுத்து வருகிறார்கள். பாத்திமா இரகசியம் முன்னுரைத்தது போல, ஒரு மாபெரும் விசுவாச மறுதலிப்பு தோன்றி, ஆன்மாக்களை மிகப் பெரும் எண்ணிக்கையில் விழுங்கி வருகிறது. உதாரணமாக, 17.10.1984 தேதியிட்ட *La Croix* பத்திரிகை யில் (அதாவது 30 வருடங்களுக்கு முன்பே) வெளியிடப்பட்ட ஒரு புள்ளி விவரத்தின்படி, "திருச் சபையின் மூத்த மகளாகிய" பிரான்ஸ் நாட்டு மக்களில் 49 சதவீதத்தினர் கிறீஸ்துவின் உயிர்ப் பையும், 57% பேர் அமல உற்பவத்தையும், 50% பேர் திவ்ய நற்கருணையில் சேசுவின் மெய்ப் பிரசன்னத்தையும், 63% பேர் பரிசுத்த தமத்திரித்துவத்தையும், 65% ஜென்மப் பாவத்தையும், 75% பேர் உத்தரிக்கிற ஸ்தலத்தையும், பசாசு என்ற ஒன்று இருப்பதையும், 77% பேர் நரகத்தையும் மறுதலித்திருக்கிறார்கள்! (நன்றி: "*Peter, Lovest Thou Me?*" page 50).

விசுவாச அழிவை அடுத்து, நல்லொழுக்க விதிகளும் இன்று முழுமையாக மறக்கப்பட்டு விடும் சூழல் தோன்றியுள்ளது. சமூக ஊடகங்கள் குறிப்பாகப் பரிசுத்த கன்னிமைக்கும், கற்புக்கும் எதிரான அருவருப்பான காட்சிகளால் நிரம்பி வழிகின்றன. ஐரோப்பிய, அமெரிக்கக் கண்டங்களில் மெய்விவாகப் பிரமாணிக்கமும், குடும்பம் என்னும் கட்டமைப்பும், அதனால் சிறு குழந்தைகளின் ஞானப் பாதுகாப்பும் மிகப் பெருமளவுக்கு அழிக்கப்பட்டு விட்டன. திருமணமின்றி சேர்ந்து வாழுதல், வெறும் ஒரு நாள் உறவு, மறு நாள் எதுவுமே நடக்காதது போலப் பிரிந்து செல்லுதல், தந்தை பெயரை அறியாத குழந்தைகள், ஓரின உறவுகள், ஓரினத் திருமணங்கள், ஜசிந்தாவின் தீர்க்கதரிசனத்தின் வழியாக மாமரி எச்சரித்த, "வினோத நாகரீக பாணிகள், உடைகளின் பாணிகள்," விபச்சாரம், இரத்த உறவுகளுக்குள்ளும் அசுத்த உறவுகள் என்பவை போன்ற பயங்கரமான காரியங்கள் மிகவும் இயல்பான காரியங்களாகி விட்டன.

உலகமும் தன் பங்கிற்கு ஆத்துமங்களை வேட்டையாடி வருகிறது. பிறரை ஏமாற்றுவதும், "திறமையாகக் கொள்ளையடிப்பதும்," ஏழைகளுக்கு இரங்காதிருப்பதும், தேவைகள் ஏதுமின்றியும் கூட, திருடியாவது பொருட்களைச் சேர்ப்பதும், மது, நடன அரங்குகள், பாவத்தையே பொழுது போக்காகக் காட்டும் ஒளிக் காட்சிகள் போன்றவையும் பெருகி, ஆத்துமங்களை வஞ்சிக்கின்றன.

இவை அனைத்திற்கும் சிகரம் வைத்தாற்போல, ஓரினத் திருமணம் தேவத்திரவிய அனுமான முறைப்படி இல்லாவிட்டாலும், சாதாரண முறையில் குருக்களால் "மந்திரிக்கப்பட" வத்திக்கான் அனுமதியளிக்கிறது. பல சமயங்களில் எல்லாத் தீமைகளும் நிறைந்தவையாகிய பதித, பிரிவினை, ப்ரொட்டஸ்டாண்ட் சபைகளும் கூட சங்கச் சபையை விட நல்லவை போலத் தோன்றும் அளவுக்கு அது தீமையில் ஊறித் திளைத்துக்கொண்டிருக்கிறது. "பச்சமாமா" என்ற பெயரில் வத்திக்கானில் விக்கிரக வழிபாட்டுக்குச் சமீபத்தில் பாப்பரசர் தலைமையில் செயல் விளக்கம் காட்டப்பட்டது. எக்குமெனிசம் என்ற பெயரில் பதித சபைகளோடு மட்டுமின்றி, சேசுநாதரின் தெய்வீகத்தை மறுக்கும் மற்ற மதங்களும் கூட இரட்சணியத்தின் வழிகளாக சங்கச் சபையால் அங்கீகரிக்கப்படுகின்றன. கத்தோலிக்க ஆலயங்களில் சர்வ தேச மத நல்லிணக்க மாநாடு என்ற பெயரில், இந்துத்துவம், பௌத்தம், முகம்மதியம், அஃப்ரிக்க வூடூ என்ற பில்லிசூனிய மதம் போன்ற மதங்களின் வழிபாடுகள் நடத்தப்படுகின்றன. கிறீஸ்துநாதர் "கடவுளர்களில் ஒருவராக," அல்லது பெரும் புரட்சியாளராகப் பார்க்கப்படுகிறார். அவரது தெய்வீகம், நவீன கத்தோலிக்கர்களால் மறுதலிக்கப்படுகிறது.

ஆக, விசுவாச மறுதலிப்பும், நல்லொழுக்கக் கேடுகளும் உரோமையிலிருந்தே வருகின்றன என்பது தெளிவாகிறது. ஆயினும் உரோமையின் இந்தச் சீர்கேட்டுக்கு உரோமையை மட்டும் குறை சொல்லிப் பயனில்லை. உலகத்தின், குறிப்பாக, கத்தோலிக்க விசுவாசிகளின் பாவங்கள்தான் அந்திக் கிறீஸ்து வருவதற்கான பாதையைத் திறந்து வைத்து, அவனை வரவேற்கச் சிவப்புக் கம்பளம் விரிக்கின்றன. இதற்கு எதிராக நம்மை எச்சரித்து, இந்த இறுதிக் காலங்களில் சரியான பாதையில் நம்மை வழிநடத்தும்படியாகவே தேவமாதா பல முறை உலகிற்கு வந்தார்கள்: ல சலேத்தில் கண்ணீர் சிந்தியபடி, பாவத்தின் காரணமாக, மனிதர்களுக்கு வரவிருந்த தண்டனைகளை முன்னறிவித்தார்கள்; லூர்தில் பாவங்களுக்குப் பரிகாரமாக, "தவம்! தவம்! தவம்!" செய்யும்படி வற்புறுத்தினார்கள்; பாத்திமாவில், ஆன்மாக்களையும், உலகத்தையும், திருச்சபையையும் காப்பாற்றும்படி இவை தனது மாசற்ற இருதயத்திற்கு அர்ப்பணிக்கப்பட வேண்டுமென்றும், தனது மாசற்ற இருதயத்திற்கு நிந்தைப் பரிகாரம் செய்யப்பட வேண்டுமென்றும் அவசர வேண்டுகோள் விடுத்தார்கள். ஜப்பானின் அக்கிற்றா காட்சியில் மனிதனின் பாவங்களைக் குறித்துக் கண்ணீர் சிந்தினார்கள். தேவ இரகசிய ரோஜா மாதா காட்சியில் தேவ ஊழியர்களின் பிரமாணிக்கமின்மைக்குப் பரிகாரமாகத் தவம் செய்யும்படி நம்மைக் கேட்டுக்கொண்டார்கள்.

ஆனால் நினிவேயைப் போல மனந்திரும்பித் தவம் செய்யாமல், இன்றைய ஆன்மாக்களும், உலகமும், சங்கச் சபையும் சோதோம், கொமோராவைப் பின்பற்றித் தொடர்ந்து பாவங்களை அதிகரித்துக்கொண்டே செல்கின்றன. இந்நிலையில், நம் ஆண்டவர் மத். 24, 25-ஆம் அதிகாரங்களிலும், தேவ அன்னை விசேஷமாக பாத்திமாவிலும் முன்னுரைத்துள்ள தண்டனைகளிலிருந்து இவை மூன்றும் தப்புவது கிட்டத்தட்ட இயலாத காரியமாகத் தோன்றுகிறது. ஆயினும் இன்னும் பகிரங்கத் தண்டனை முழு அளவில் தொடங்கவில்லை என்பதால், இன்னும் நமக்கு நேரம் இருக்கிறது என்று நம்பி, இனியாவது மரியாயின் மாசற்ற இருதய பக்தியாகிய முதல் சனி பக்தியையும், ஜெபமாலை பக்தியையும் பக்தியோடும், அன்போடும் அனுசரித்து, மரியாயின் மாசற்ற இருதயத்திற்கு ஆறுதல் அளித்து, நம்மையும், நம்மைச் சார்ந்த ஆத்துமங்களையும், உலகத்தையும், திருச்சபையையும் கடும் தண்டனைகளிலிருந்து காப்பாற்ற முன்வருவோமாக. மரியாயே வாழ்க!

# சேசுவின் திரு இருதயம் எங்கும் சிநேகிக்கப்படுவதாக!”



சேசுவின் மகா பரிசுத்த திரு இருதயம் தேவ-மனிதரின் இருதயமாக இருக்கிறது. மனிதாவதாரப் பரம இரகசியத்தின் வழியாக, தேவ சுதன், இஸ்பிரீத்துசாந்து நிழலிட்டதால், பரிசுத்த கன்னி மாமரியின் மாசற்ற இருதயத்திலிருந்து ஒரு மனித இருதயத்தை எடுத்துக்கொண்டார். திரு இருதயப் பிரார்த்தனையில், தேவ சுதனின் மனிதாவதாரத்தைப் பற்றிய மிக அழகிய மன்றாட்டு ஒன்று உள்ளது: ‘‘பரிசுத்த கன்னித் தாயின் உதரத்திலே இஸ்பிரீத்து சாந்துவினால் உருவான சேசுவின் திரு இருதயமே.’’ இதற்கு அடுத்த மன்றாட்டு, சேசுவின் மனித இருதயம் அவரது தேவ சுபாவத்தோடு ஒன்றித்திருக்கிறது என்பதை நமக்கு நினைவுபடுத்துகிறது: ‘‘தேவ வார்த்தையாகிய சுதனோடு ஒரே பொருளாய் ஒன்றித்திருக்கும் சேசுவின் திரு இருதயமே...’’ சுவிசேஷங்களில்: ‘‘என் மக்களிடம் என் இருதயம் பரிவுகொள்கிறது’’ (மத்.15:32) என்றும், ‘‘வருத்தப்பட்டுப் பாரஞ்சுமக்கிறவர்களே, என் அண்டையில் வாருங்கள். நான் உங்களுக்கு இளைப்பாறுதல் தருவேன்... என்னிடமிருந்து கற்றுக்கொள்ளுங்கள். ஏனெனில் நான் சாந்தமும், இருதயத் தாழ்ச்சியும் உள்ளவன். உங்கள் ஆத்துமங்களும் இளைப்பாற்றியைக் கண்டடையும். ஏனெனில் என் நுகம் எளியது, என் சுமை இனியது’’ (மத்.11:28) என்றும் கிறீஸ்துநாதர் கூறும்போது, அவர் தமது சொந்த இருதயத்தையே குறிப்பிடுகிறார்.

தேவ உயிர் நம்மீது பொழியப்படும் செயல், கிறீஸ்துவின் திறக்கப்பட்ட இருதயத்திலிருந்து வழிந்தோடிய இரத்தத்தாலும், நீராலும் குறித்துக் காட்டப்படுகிறது. இச்செயல் அவருடைய திருச்சபையில், விசேஷமாக தேவத்திரவிய அனுமானங்களில் தொடர்கிறது. சேசுவின் ஊடுருவப்பட்ட திரு இருதயத்திலிருந்து வழிந்த தண்ணீரிலும், இரத்தத்திலும் திருச்சபை எப்போதும் ஞானஸ்நானம், திவ்ய நற்கருணை ஆகிய தேவத் திரவிய அனுமானங்களைக் காண்கிறது. இவற்றினால், இஸ்பிரீத்துசாந்து நம் ஆத்துமங்களுக்குள் ஊற்றப்படுவதன் வழியாக, திருச்சபையில் நாம் உயிர் பெறுகிறோம். இவற்றின் மூலமாகத்தான் நம்மில் வாசம் செய்கிற இஸ்பிரீத்துசாந்துவானவரின் உயிர், கிறீஸ்துநாதரின் மெய்யான சரீரமாகிய பரலோக உணவால் போஷிக்கப்படுகிறது.

திவ்ய கன்னிகை தேவ அடிமையாகத் தன்னை அர்ப்பணித்ததும், தேவ சுதனின் தேவ சுபாவத்தோடு மனித சுபாவம் இணைந்து, சேசுவின் திரு இருதயம் துடிக்கத் தொடங்கியது. அவர் நமக்காகப் பிறந்தார், நமக்காக வாழ்ந்தார், நமக்காகவே மரித்தார். தமது கொலைஞர்களின் வன்முறையைவிட அதிகமாக அன்பினாலேயே அவர் சிலுவையில் அறையப்பட்டார்; ‘‘அவர் என்னை நேசித்து, எனக்காகத் தம்மையே கையளித்தார்’’ என்ற அப்போஸ்தலரின் கூற்றுப்படி, அவர் ஒவ்வொரு மனிதனுக்கும் தம்மையே உன்னதக் கொடையாகத் தந்தார். அவர் தமது இருதயத்தில் வைத்துள்ள பேறுபலன்களின் அளவற்ற பொக்கிஷத்தை இரட்சிக்கப்பட்ட மனித இனத்தின்மீது பொழிகிறார்.

அவர் அர்ச். மர்கரீத் மரியம்மாளிடம்: ‘‘மனிதர்களை எவ்வளவோ அதிகமாக நேசித்த என் இருதயத்தைப் பார். பதிலுக்கு அவர்களிடமிருந்து நான் பெறுவதெல்லாம் நன்றியற்றதனமும்,

நிந்தை அவமானங்களுமே. இவற்றிற்குப் பரிகாரம் செய்வதன் மூலம் நீயாவது எனக்கு ஆறுதல் அளிக்க முயற்சியெடு" என்றார். மனிதர்களில் பெரும்பாலானவர்கள் கடவுளிடமிருந்து நன்மை களைப் பெற்றுக்கொள்வதுதான் பக்தி என்று நினைக்கிறார்கள். ஆனால் இங்கோ, சேசுவின் திரு இருதயம் மனிதர்களிடம் ஆறுதல் கேட்கிறது. சர்வ வல்லபர் அற்பப் புழுவிடம் ஆறுதலைக் கேட்பது எவ்வளவு பரிதாபம்! ஆனால் அதையும் நாம் தர மறுப்பது எத்தகைய அக்கிரமம்! இதைப் புரிந்து கொண்டால், அவரை நேசிப்பதும், அவருக்கெதிரான நிந்தைகளுக்குப் பரிகாரம் செய்வதும் நமக்கு எவ்வளவு எளிதாயிருக்கும்!

சேசுவின் இந்த வல்லமை மிக்க திரு இருதயத்திற்கு மனித ஆறுதல் என்பது தேவைதானா? இந்தத் திரு இருதயம் வல்லமை மிக்க சர்வேசுரனும், மனிதனுமானவரின் திரு இருதயம் என்ற முறையில் அதற்கு மனித ஆறுதல் அற்ப அளவிலும் கூட தேவையில்லை. ஆனால் இங்கே இருதயம் என்பது தேவனும், மனிதனுமானவர் மனிதர் மீது கொண்ட அளவற்ற பேரன்பிற்கு ஒரு மாற்றுச் சொல் லாகப் பயன்படுத்தப்படுகிறது. பெத்லகேமிலும், நாசரேத்தின் மறைந்த வாழ்விலும், அவருடைய பொது ஜீவியத்திலும், எல்லாவற்றிற்கும் மேலாக, கல்வாரியின்மீதும் அளவற்ற விதமாக மனிதர் மீது பொழியப்பட்ட இந்தத் தெய்வீகப் பேரன்பு, மனிதர்களின் பாவங்களால் காயப்படுத்தப்படு கிறது. அவரது மனித சுபாவம், அவரால் மீட்டு இரட்சிக்கப்படும் ஆத்துமங்களிடமிருந்து **பதிலன்பைத்** தேடுகிறது, அவர்களுக்குத் தாம் செய்த சகல நன்மைகளுக்கும் அவர்கள் **நன்றியுள்ளவர்களாக** இருக்க வேண்டுமென்று எதிர்பார்க்க அவர் முழு உரிமையுள்ளவராக இருக்கிறார்.

ஆனால் தங்கள் இரட்சணியத்தை அலட்சியம் செய்பவர்களும், தங்களுக்காகச் சிந்தப்பட்ட மகா பரிசுத்த திவ்ய இரத்தத்தை வீணாக்குபவர்களும், அவர் தங்களுக்குக் காண்பித்துள்ள அன்புக்குப் பிரதிநன்றியாக, காரணமேயின்றி அவரைத் தங்கள் செயல்களால் வெறுத்துப் பகைப்பவர்களுமான மனிதர்களைக் குறித்து அவருடைய திவ்ய இருதயம் மீண்டும் பல முறை வியாகுல ஈட்டியால் குத்தித் திறக்கப்படுகிறது. இந்த அளவற்ற வேதனையில்தான் அவருடைய திரு இருதயம், அவரை நேசிப்பவர்களிடம் ஆறுதலுக்காகத் திரும்புகிறது.

ஆகவே, சேசுவின் திரு இருதய பக்தியின் **முதல் நோக்கம்**, சேசுவின் மட்டில் இகழ்ச்சி அல்லது குறைந்த பட்சம் அசட்டைத்தனம் உள்ளவர்கள்மீது அவர் கொண்ட பேரன்புக்குப் பிரதியன்பு செலுத்துவதும், நமது நன்றியறிதலாலும், எல்லா வகையான சங்கை மரியாதையாலும், திவ்ய நற்கருணையில் சேசு நமக்குக் காட்டும் நேசத்திற்கு மகிமையும், நன்றியறிதலும் செலுத்துவதும் ஆகும். நற்கருணையில் தம்மை அறிந்துள்ள மக்களால் கூட அவர் மிகக் குறைவாக நேசிக்கப் படுகிறார். இந்த பக்தியின் **இரண்டாவது நோக்கம்**, அவரது இவ்வுலக வாழ்வில் அவருடைய அன்பு அவரை எவற்றிற்கு உட்படுத்தி வைத்திருந்ததோ, அந்த நிந்தை, அவமானங்களுக்கும், திவ்ய நற்கருணையில் ஒவ்வொரு நாளும் தமது அன்பினால் அவர் எதிர்கொள்கிற நிந்தை அவமானங்களுக்கும் நம்மால் முடிந்த எல்லா வழிகளிலும் பரிகாரம் செய்வது ஆகும்.

## சேசுவின் திரு இருதயத் திருநாள் அனுசரிப்புகள்:

தமது திரு இருதயத்தின் மகிமைக்காக ஒரு நாளை (திவ்ய நற்கருணைத் திருநாளுக்குப் பின் வரும் வெள்ளி) அவர் நியமித்திருக்கிறார். இத்திருநாளின் தேதி அவராலேயே தேர்ந்தெடுக்கப் பட்டது. அவரது தேவசிநேகம் உட்பட, நம் இரட்சகர் வாக்களித்துள்ள இந்தப் பெரும் வரப்பிர சாதங்களைத் தவறாமல் பெற்றுக்கொள்வதற்கு, இத்திருநாள் சேசுவின் திரு இருதயத்தை மகிமைப் படுத்தும் கருத்தோடு செலவழிக்கப்பட வேண்டும். இத்திருநாளில் நாம் செய்ய வேண்டியவை:

*(1) பாவசங்கீர்த்தனம் செய்து, பூசை கண்டு, சேசுவின் திரு இருதயத்திற்கு எதிராகச் செய்யப்படும் நிந்தைகளுக்குப் பரிகாரமாக திவ்ய நன்மை உட்கொள்ள வேண்டும்; (2) ஒரு முறையாவது ஆழ்ந்த தியானத்தோடு திவ்ய நற்கருணையைச் சந்திக்க வேண்டும். திவ்ய நற்கருணையை ஸ்தாபிப்பதில் காண்பிக்கப்பட்ட அளவற்ற சிநேகத்திற்காக சேசுவுக்கு நன்றி கூறுவதும், நாம் திவ்ய நன்மை உட்கொண்டுள்ள எல்லா வேளைகளுக்காகவும், நாம் பெற்றுக்கொண்ட எல்லா விசேஷ ஆசீர்வாதங்களுக்காகவும் அவருக்கு நன்றி கூறுவதும், சகல நிந்தைகளுக்கும் பரிகாரம் செய்வதும், நம் ஆழ்ந்த சங்கையாலும், மேரை மரியாதையாலும், சங்கைக் குறைவுகள், அவபக்திகள் மற்றும் தேவத்துரோகங்களுக்குப் பரிகாரம் செய்வதும் இந்த நற்கருணை சந்திப்பின் நோக்கமாக இருக்க வேண்டும்.*

*தொடர்ந்து ஒன்பது தலைவெள்ளிகளில் நாம் பூசை கண்டு, பரிகார நன்மை உட்கொள்ளவும், சேசுவின் திரு இருதயத் திருநாள் அனுசரிப்புகள் அனைத்தையும் தலைவெள்ளிக்கிழமைகளிலும் அனுசரிக்கவும் வேண்டும். குறிப்பாக, இந்நாளில், திரு இருதயப் பிரார்த்தனையும், ஜெபமாலையும், முடிந்தால், திரு இருதய கட்டளை ஜெபமும் சொல்லப்பட வேண்டும். பணிச் சுமையால் இது இயலாதபோது, அடிக்கடி சேசுவின் அன்பை நினைத்து, பக்தியுருக்கத்தோடு,* **"என் ஆண்டவரே, என் தேவனே!" "சேசுவே, உம்மை நேசிக்கிறேன்!" "சேசுவின் திரு இருதயம் எங்கும் ஸ்துதிக்கப்படுவதாக"** *என்பவை போன்ற மனவல்லய ஜெபங்களைச் சொல்ல வேண்டும். மனதுருக்கத்தோடு இந்த பக்தியைத் தொடங்குபவர்கள் படிப்படியாக, ஒரு வாடிக்கைச் சடங்காக விருப்பமேயின்றித் தொடர்ந்து அதைச் செய்வது மனித பலவீனம். ஜெபத்தாலும், தியானத்தாலும், நம் நிலையான முயற்சிகளாலும் இந்த அசட்டைத்தனத்தின் மீது நாம் வெற்றிகொள்ள வேண்டும். மேலும், பாவ வாழ்வையும், புண்ணிய வாழ்வையும் பிரிப்பது நம் சித்தம் என்ற நூல் வேலி மட்டுமே, அது எளிதாக அறுந்துவிடும் என்பதை மனதில் கொண்டு, புண்ணிய வாழ்வில் நிலைபெறும்படி ஜெபத்தாலும், பாடுகளின் தியானத்தாலும், தவத்தாலும், ஒறுத்தல் பரித்தியாகங்களாலும் நாம் "நாள்தோறும்," "இடைவிடாமல்" இந்த நூல்வேலியை அறுந்து போகாத இரும்புச் சங்கிலியாக மாற்றிக்கொள்ள வேண்டும்.* **பரிகாரம் என்பது தேவசிநேகமேயன்றி வேறில்லை! கடவுளை நேசிக்காதவனால் அவருக்குப் பாவப் பரிகாரம் செய்யவே இயலாது!**

*எல்லாவற்றிற்கும் மேலாக, சகல அக்கிரமங்களும் நிறைந்த இவ்வுலகில் நம் ஆண்டவர் வாழ்ந்த போது, அவரைப் பாவ வெப்பத்திலிருந்து பாதுகாக்கும் அடைக்கலமாக இருந்த "அமல உற்பவ இருதயத்தை" நாம் நேசிக்க வேண்டும். அந்த மாசற்ற இருதயத்தைக் கண்டுபாவித்து, அத்திரு இருதயத்தின் பள்ளியில் சேசுவின் திரு இருதயத்தை நேசிக்க நாம் பயிற்சி பெற வேண்டும். தேவமாதா தனக்காக அன்றி, சேசுவுக்காகவே அவரை நேசித்தார்கள். நம் மீட்பின் நிமித்தம் அவரது திருப்பாடுகளில் பங்குபெற்றார்கள். நித்தியத்திற்கும் சேசுவின் திரு இருதயத்தில் இளைப்பாற ஏங்கும் யாரும், மரியாயின் மாசற்ற இருதயத்தின் இந்த இரு உன்னதப் புண்ணியங்களைப் பின்பற்றி, தனக்காக அன்றி, சேசுவுக்காகவே அவரை நேசிக்கவும், தன்னுடையவும், மற்றவர்களுடையவும், "நன்றியற்றதனத்திற்கும், நிந்தை அவமானங்களுக்கும்" பரிகாரமாக, தனக்கு வரும் துன்பங்களை அமைந்த மனதோடு தாங்குவதன் மூலம் திருப்பாடுகளில் பங்குபெறவும் வேண்டும். அப்போது, சேசு, மரிய இருதயங்கள் ஆறுதல் பெறும்; நித்திய ஆறுதல் நம்முடையதாகும். மரியாயே வாழ்க!*

---

**சேசுவின் திரு இருதய மாதமாகிய ஜுன் மாதத்தில், உங்கள் இல்லங்களில் சேசுவின் திரு இருதயப் படத்தை ஸ்தாபகம் செய்து, அவரது அரசாட்சிக்கு உங்கள் குடும்பங்களை ஒப்புக்கொடுக்கவும், ஏற்கெனவே ஸ்தாபகம் செய்துள்ளவர்கள் அதைப் புதுப்பிக்கவும் மறவாதீர்கள்.**

# மோட்சத்தின் பிணையாகிய பிறர்சிநேகம்

**"நீங்கள் ஒருவரை ஒருவர் சிநேகிக்கும்படியாக, நான் உங்களுக்கு ஒரு புதிய கட்டளை கொடுக்கிறேன். நான் உங்களை சிநேகித்தது போல, நீங்களும் ஒருவர் ஒருவரை சிநேகிக்கக் கடவீர்கள்"** *(அரு.13:34).*



சேசு தாம் கல்வாரியில் பலியாகப் போகுமுன் இராப்போஜன அறையில் பன்னிரு அப்போஸ்தலர்களையும் ஒன்றாகக் கூட்டிச் சொன்ன கனிவும், அன்பும், ஆழமும் மிக்க வாக்கியம் இது. சிநேகத் தால் மட்டுமே தூண்டப்பட்டு இவ்வுலகை சிருஷ்டித்த கடவுள்-மனிதர் கூறிய வாக்கியம் இது. ஒவ்வொரு மனிதனும் தன்னைப் போல பிறரை நேசிக்க வேண்டுமென்று அவர் காயீனுக்கு அறிவுறுத்து கிறார். பிறர்சிநேகமற்ற அவனைத் தண்டிக்கவும் செய்கிறார்.

புதிய ஏற்பாட்டில் சேசு இராப் போஜன அறையில், தம் சீடர்கள் தங்களைப் போல் பிறரையும் நேசிக்க அவர்களுக்குக் கட்டளையிடு கிறார். அவர்கள் வழியாக, சகல மனிதர்களுக்கும் இதை அவர் அறிவிக் கிறார். சீனாய் மலையில் தரப்பட்ட பத்துக் கற்பனைகளில் மூன்று, அவரைப் பற்றியவை, மீதமுள்ள ஏழு, நம் அயலார் மட்டில் நமக்குள்ள கடமைகளைக் குறிப் பவை. அதைத்தான் புதிய ஏற்பாட் டில், இராப் போஜன அறையில் அவர் புதுப்பிக்கிறார். நேசமே உருவானவர் தம்மையும், தம் நிமித்தமாக சகல மனிதரையும் நேசிக்கும்படி கட்டளையிடுகிறார்.

முதலில்: இன்று கத்தோலிக்கக் குடும்பங்களில் பிறர்சிநேகம் இல்லை. கணவனுக்கு மனைவி கீழ்ப்படியவும், கணவன் மனைவிக்குரிய மரியாதை தந்து அவளை நேசிக்கவும் மறுத்ததாலேயே பல பிரச்சினைகள், அதனால் சமாதானக் கேடு. பரஸ்பர முழு அன்பு, தாழ்ச்சி, பொறுமை, மன்னிப்பு, விட்டுக்கொடுத்தல், மொத்தத்தில், **சிநேகமில்லை,** முடிவில், விவாகரத்து, பிரிவினை, தகராறு.

இரண்டாவது, பெற்றோர், பிள்ளைகளிடம் உண்மையான அன்பு, சமாதானம் இல்லை. எல்லாருமே சுயநலவாதிகளாக இருக்கிறார்கள். கஷ்டப்பட்டுப் பெற்று, வளர்த்து, ஆளாக்கி, ஒரு நல்ல சமூக அந்தஸ்தைக் கொடுத்த பெற்றோரைத் தவிக்கவிட்டு, சுயநலமாக வாழும் பிள்ளைகள், மருமக்கள். ஒரு சில பெற்றோரும் கூட நீதியோடு நடப்பதில்லை. **சிநேகம் அங்கில்லை.**

மூன்றாவதாக, எல்லாக் கத்தோலிக்க ஊர்களிலுமுள்ள பெரிய பிரச்சினை சமாதானக் கேடு, ஊர் இரண்டுபட்டிருக்கிறது. வடக்குத் தெருவுக்கும், தெற்குத் தெருவுக்கும் சண்டை, அல்லது மேற்குத் தெருக்கும், கிழக்குத் தெருவுக்கும் சண்டை. **இங்கும் சிநேகமில்லை.** முடிவில், ஊர்த் தகராறு, ஒரே ஊரில், ஒரே இனத்தில், ஒரே இரத்த உறவுகளிடையே குழப்பம், சண்டைகள், சமாதானக் கேடு!

நான்காவதாக, குருக்கள், மக்கள் என்ற இரு பிரிவுகள். குருவுக்கு ஆதரவாக ஒரு கூட்டம், எதிராக மற்றொரு கூட்டம். தவறான கணக்கு வழக்குகள், அன்பியங்கள் என்று பல காரணங்கள் இருக்கலாம். **இங்கும் சிநேகமில்லை.** தங்களை நேசித்து, தங்களுக்காக உயிரைக் கையளித்தவரைத் தங்கள் அயலாரில் நேசிக்க யாரும் இல்லை. முடிவில், சமாதானக் கேடு! குருக்களுக்கும் குருக் களுக்கும் இடையில் கூட சண்டை, ஆயரோ, தலையிட முடியாத நிலையில் இருக்கிறார்!

ஐந்தாவது, சாத்தானின் மிகப் பெரிய சதியின் உச்சக்கட்டம், சாதிகளை வைத்து மனிதர் களைப் பிரித்தாளுவது. சிநேகமானவர் சிநேகிக்கப்படாவிட்டால், சுபாவத்திற்கு மேலான சகோ தர அன்பு நம்மில் குடிகொண்டிருக்க முடியுமா? சாதிகள் சமாதானக் கேட்டின் பிறப்பிடங்கள்.

அன்பு இருக்கும் இடத்தில் கடவுள் இருக்கிறார். அன்பு இல்லாத இடத்தில் சாத்தான் இருப்பான். எந்த ஓர் ஆன்மாவும் வெறுமையாய் இருக்க முடியாது. ஒன்றில், பிதா, சுதன், இஸ்பிரீத்துசாந்துவாகிய சர்வேசுரன் இருப்பார், அல்லது சாத்தான் இருப்பான். இந்தியாவில் பல சாதிகள் இருந்தாலும், கிறீஸ்தவர்களாக மனம் மாறியபின், கிறீஸ்துவையும், அவரது போதனைகளையும் பின்பற்றுபவர்களில், "யூதனென்றும், கிரேக்கனென்றுமில்லை, அடிமையென்றும் சுயாதீனனென்றுமில்லை" (கலாத். 3:28); ஆனால் இவர்களோ அவரைப் பின்பற்றாமல், ஒவ்வொருவரும் தங்கள் சாதியே உயர்ந்தது என்று கொடி பிடிக்கிறார்கள். சேசு சிரசாயிருக்க, நாம் அவரில், திருச்சபையாகிய ஞான சரீரத்தின் உறுப்புகளாயிருக்கிறோம். சேசுவையும், மாதாவையும், கத்தோலிக்கத் திருச்சபையையும்விட இவர்கள் உள்ளத்திலும், இரத்தத்திலும் சாதி வெறி என்ற கொடிய, பிறரன்புக்கு எதிரான பெரிய பாவத்தைக் கொண்டிருக்கிறார்கள். இதில் பல குருக்களும் கூட முக்கியப் பங்கு வகிக்கிறார்கள். பலர் தங்கள் மக்களை இரகசியமாகத் தூண்டி விடுகிறார்கள். இது எல்லா மறை மாவட்டங்களிலும் சர்வ சாதாரணமாக நடக்கிறது. இது சேசுவின் கட்டளைகளுக்கு எதிரானது. அந்த இனிய நேசரின் நேசத்திற்கு எதிரானது.

இந்தப் பிறரன்புக்கு எதிரான பாவம், மனம் பொருந்திச் செய்கிற, கனமான, சாவான பாவம் என்று 99% கிறீஸ்தவர்கள் சிந்திப்பதில்லை. இவர்கள் மனம் வருந்தாமலும், சமாதானம் செய்யாமலும், பகையை மறவாமலும், கசப்போடு வாழ்ந்து, மனஸ்தாபமின்றி இறந்தால், நேரே நரகத்திற்குத்தான் செல்வார்கள். நேசமானவர் மோட்சத்தில் நம்மை எதிர்பார்த்துக் காத்திருக்கிறார். ஆனால் இவர்களோ லூசிபரையே தேர்ந்துகொள்கிறார்கள். நம் மீட்பிற்காக, மனிதாவதாரத்தின் துன்பத்தையும், ஒரு மனித சரீரத்தின் பல துன்பங்களையும், இறுதியாக கசையடிகளையும், முள்முடியையும், சிலுவையின் அகோர வேதனைகளையும் சுமந்தவரை அவமானப்படுத்தும் விதமாக அவரிடமிருந்து விலகி, பரபாஸைத் தேர்ந்துகொண்ட யூதர்களைப் போல், இவர்கள் லூசிபரைத் தேர்ந்துகொள்கிறார்கள். மோட்சத்தை விட இவர்கள் நரகத்தையே அதிகம் நேசிப்பதாகத் தோன்றுகிறது!

அன்புச் சகோதரரே, மேற்கூறிய அனைத்திற்கும் முடிவில், நம்மிடம் மன்னிப்பில்லை, சகோதர அன்பில்லை, விட்டுக் கொடுத்தல், சமாதானமில்லை. அனைவரும் ஆலயத்திற்கு வருகிறோம், நன்மை வாங்குகிறோம். ஆனால் பாவத்தோடு தைரியமாய் வாழ்கிறோம். யாரும், திருந்தவோ, திருத்தவோ விரும்புவதில்லை. கல்வாரியைப் பாருங்கள்! திவ்ய நற்கருணையை உற்றுநோக்குங்கள். சிநேகமானவர் நம் மீதுள்ள சிநேகத்திற்காக மோட்சத்திலிருந்து நம்மிடம் வந்திருக்கிறார். அதே கல்வாரி வழியாகவும், திவ்ய பலிபூசை, திவ்ய நற்கருணை மூலமாகவும் நாம் பூமியிலிருந்து மோட்சத்திற்கு ஏறி வர வேண்டுமென்று அவர் ஏங்குகிறார்!

நம்மிடம் சிநேகமில்லாவிடில், அது நம்மில் தாழ்ச்சியை அழித்து, ஆங்காரத்திற்கு நம்மை இட்டுச் செல்லும். அதன் விளைவே யார் பெரியவன், யார் சிறியவன் என்னும் போட்டி மனப்பான்மையாகும்.

முடிவு: பிறரன்பு மிக எளிதானது, சுலபமானது. நாம் நம் பெற்றோரையும், உடன்பிறந்தவர்களையும், உறவினர்களையும் நேசிப்பது சுபாவ அன்பு. நமக்குத் தெரியாதவர்களை, அன்னியர்களை, ஊழியர்களை, மற்ற இனத்தவரை, ஏன், நம் பகைவர்களையும் கூட, கடவுளின் பெயரால் நேசிப்பது, சுபாவத்திற்கு மேலான அன்பு. "என் நுகம் இனிது, என் சுமை எளிது" என்ற ஆண்டவர், நம்மால் முடியாததை ஒருபோதும் நமக்குக் கட்டளையாகத் தர மாட்டார். பிறர்சிநேகத்திற்கு எதிரான இப்பாவங்கள் எல்லா மேற்றிராசன குருக்கள், கன்னியர், துறவிகளிடமும், விசுவாசிகளிடமும் சர்வ சாதாரணமாகக் காணப்படுகின்றன. ஒளியையும் (சேசுவையும்), ஒளியைத் தாங்கியவர்களையும் (தேவ மாதாவையும்) நாம் பின்பற்றுகிறோம். மனந்திரும்புவோம், அதன் மூலம் நம் நாடும் விரைவில் கிறீஸ்து அரசரின் அரசாட்சியின்கீழ் வந்து சேரும். அங்கே சந்தோஷமும், சமாதானமும், அன்பும் பூரணமாய்த் துலங்கும்.

# தேவ அழைத்தல்: புனிதர் மொழிகள்

“சர்வேசுரனுடைய மகிமைகளைப் பரப்ப மெய்யான ஆசை கொண்டிருப்பவனுக்கு அந்த (குருத்துவ/துறவற) ஜீவியத்திற்கு அவசியமான விசேஷ வரப்பிரசாதங்களைத் தந்தருள சர்வேசுரன் ஒருபோதும் மறப்பதில்லை.”

“மிக உத்தம ஜீவியத்திற்கான அழைப்பு கால தாமதமின்றிப் பின்பற்றப்பட வேண்டும். ஏனெனில் சர்வேசுர னிடமிருந்து வரும் இப்பேர்ப்பட்ட வெளிச்சமும், தூண்டுதல்களும் கடந்து போகக் கூடியவை, நிரந்தரமாக இருப்பவை யல்ல. ஆகவே, இத்தெய்வீக அழைப்பு உடனடியாக ஏற்றுக்கொள்ளப்பட வேண்டும்;”

நம்மைத் துறவற வாழ்வுக்குத் தூண்டி, நமதாண்டவரின் அடிச்சுவடுகளைப் பின்பற்றச் செய்யும் அறிவுரைகள் பசாசிடமிருந்து வந்தாலும் சரி, அல்லது மனிதர்களிடமிருந்து வந்தாலும் சரி, சர்வேசுரன் நம்மை அதை நோக்கி ஈர்க்காவிட்டால், இந்த ஆலோசனைகள், அறிவுரைகள் எல்லாம் வீணானவையாயிருக்கும், அவை பலனற்றுப் போய் விடும் **- அர்ச். தாமஸ் அக்குயினாஸ்,**



“சர்வேசுரனுக்கு ஊழியம் செய்ய வேண்டும் என்ற தீர்க்கமான, திடமான சித்தமே உண்மையான தேவ அழைத்தலுக்கான சிறந்த அடையாளமாக இருக்கிறது;”

“சிலுவையில் அறையப்படுவதும், ஓயாது தன்னையே மறுதலித்து, சர்வேசுரனுக்காக மட்டுமே வாழ்வதும், நம் இருதயம் தேவ மகத்துவத்திற்குக் கையளிக்கப்படுவதும், கண்கள், நாவு, கரங்கள் மற்றும் நம் எல்லா அங்கங் களும் கடவுளுக்குத் தொடர்ந்து ஊழியம் செய்வதும், நம் இருதயங்களை ஆய்ந்தறிந்து, நமக்கு நாமே மரிப்பதும், சர்வேசுரனுக்காக மட்டுமே வாழ்வதுமாகிய ஒரு வாழ்வு, ஒரு நீண்ட, போராட்டம் நிறைந்த வாழ்வாக இருக்கிறது. துறவறம் என்பது சுய மறுப்பினுடையவும், ஒறுத்தலினுடையவும் பள்ளிக்கூடமேயன்றி வேறல்ல;

நாம் எப்படி குருத்துவ/துறவற வாழ்வை ஆரம்பித்தோம் என்பது பெரிய காரியமல்ல. அதில் நீடித்து நிலைத்திருந்து, நல்ல முடிவை அடைவதே முக்கியமானது **- அர்ச். பிரான்சிஸ் சலேசியார்,**



தேவ அழைத்தல்களை மனிதர்கள் கைவிடுவது பற்றியும், தங்களால் முடியாது என்று அவநம்பிக்கைப்படுவது பற்றியும், அதன் மூலம் சர்வேசுரனுடைய அன்பை ஏளனம் செய்வது பற்றியும், ஆன்மாக்களின் அழிவுக்குக் காரணமாயிருந்தது பற்றியும், பரிசுத்த சம்மனசுக்களும், அர்ச்சியசிஷ்டவர்களும், “ஐயோ, அந்தோ!” என்று புலம்பித் துயரப்படுகிறார்கள் **- முத்திப்பேறு பெற்ற கர்தினால் நியூமன்,**



**அதிமேற்றிராணியார் மிக வந். மார்சல் லெஃபேர், பத்தாம் பத்திநாதர் சபை ஸ்தாபகர்:** தேவ அழைத் தலைப் புரிந்துகொள்ள முடியாத, முற்றிலும் உலகத்தன்மையான மனிதர்கள், “ஒரு நீண்ட அங்கியை அணிந்து கொண்டு, ஒரு குருமடத்தில் தன்னையே ஒருவன் அடைத்துக்கொள்வதும், புலன்களின் இன்பங்களை மறுத்துத் தள்ளுவதும், உலக செல்வங்களிடமிருந்து தன் முகத்தைத் திருப்பிக்கொள்வதும், தரித்திரத்தில் வாழ்வதைத் தெரிந்து கொள்வதும், தனக்காக வாழாமல், கடவுளின் மகிமைக்காகவும், மற்றவர்களின் ஆன்ம இரட்சணியத்திற்காகவும் வாழ்வதும், நம்ப முடியாத காரியம்! முற்றிலும் நம்ப இயலாத காரியம்! ” ஆனால் இந்த தேவ அழைத்தலோ, தேவ உதவியின்றி, மனிதர்களால் ஒருபோதும் புரிந்துகொள்ள முடியாத ஒரு பரம இரகசியமாக இருக்கிறது.



# சாத்தானின் தந்திர சோதனைகளை வெல்லும் விதம்



வேதபாரகர்களின் கருத்துப்படி, பிதாவாகிய சர்வேசுரன் தமது பிரிய குமாரன் சேசுவாக மனித உருவில் இவ்வுலகில் தோன்றப் போவதாக அறிவிக்கிறார். எல்லா அரூபிகளும் அவரை வழிபடவும், அவருக்கு ஊழியம் செய்யவும் வேண்டும் என்றும் அவர் உத்தரவிடுகிறார். கடவுள் மனித னாவதால், "தேவ-மனிதருக்கும்," அவரது திருமாதாவுக்கும் தான் ஊழியம் செய்ய வேண்டியிருக்கும் என்பதையும், கடவுள் மனித சுபாவத்தை எடுத்துக் கொள்வதால், அது மகிமை பெறும் என்பதையும் கண்டு சாத்தான் ஆங்கார முற்று, கடவுளின் ஆணைக்கு அடிபணிய மறுத்தான். "எனக்கு ஒப்பானவன் எவன்? நான் ஏன் கடவுளுக்கு அடிபணிய வேண்டும்?" என்று இறுமாந்து எழுந்தான்; அது, தான் என்ற ஆணவம்; தனக்கு நிகரானவர் எவரும் இல்லை என்ற துணிவு; தானே தனக்குப் போதும் என்ற தற்பெருமை.

கடவுளின் இந்தக் கட்டளையைக் கேட்டபோது, தீமையின் உணர்வு ஒன்று அவனுள் எழுந்தது என்று சில வேதபாரகர்கள் கூறுகின்றனர். இதை அவன் உடனே அடக்கியொடுக்கி, அதன் மீது வெற்றிகொண்டிருப்பான் என்றால், பசாசுக்கள் என்ற இனமே இல்லாமல் போயிருக்கும். ஆனால் அவனோ, தனது இந்தப் புதிய "அறிவில்" இன்பம் கண்டான். அது தரவிருந்த "சுதந்திரத்தில்" மூடத்தனமுள்ள அக்களிப் புக் கொண்டான். அதன் காரணமாக, இந்த "அறிவாலும், சுதந்திரத்தாலும்" வஞ்சிக்கப்பட்டு, நரகத்தில் தள்ளப்பட்டான்.

சாத்தான் எவற்றால் வீழ்ச்சியடைந்தானோ, அதே "அறிவையும், சுதந்திரத்தையும்" கொண்டு மனுக்குலத்தைப் பாவத்தில் வீழ்த்த அவன் திட்டமிட்டான். சர்வேசுரன் ஆதிப் பெற்றோரைப் படைத்தபோது, அவர்கள் "அறிந்து"கொள்ளத் தேவையில்லாத தீமையை அவர் அவர்களிடம் இருந்து மறைத்து வைக்கச் சித்தங்கொண்டார். "நன்மையும் தின்மையும் அறிவிக்கும் மரத்தின் கனியை உண்ணாதிருப்பாயாக, ஏனென்றால் அதை நீ புசிக்கும் நாளிலே சாகவே சாவாய்" (ஆதி. 2:17) என்னும் வார்த்தைகளில் அவர் தமது இந்தத் திருச்சித்தத்தை வெளிப்படுத்துகிறார். ஆயினும், மனிதனின் சுயாதீன சித்தத்தை அவர் தடைசெய்யவில்லை. **அதைப் பயன்படுத்தி, அவன் தீமையைத் தள்ளி, நன்மையைத் தெரிந்துகொண்டு, அதன் மூலம் தம்மை மகிமைப்படுத்த வேண்டுமென்று அவர் விரும்பினார்.**

ஆனால் பசாசு தீமையை அறியும் இந்த "அறிவை" ஏவாளுக்கும், அவள் வழியாக ஆதாமுக் கும் அறிமுகப்படுத்தி, கடவுளின் அன்பின் நுகத்தடியைத் தள்ளிவிட்டு, தீமையின் "சுதந்திரத்தை" ஏற்றுக்கொள்ளும்படி அவளை வற்புறுத்தினான். அந்தக் கனியின் "அழகையும், சுவையையும்" அவளுக்குக் காண்பித்தான். இவ்வாறு, தன்னை வஞ்சித்த அதே அறிவாலும், சுதந்திரத்தாலும், அவன் மனிதனையும் வஞ்சித்துப் பாவத்தில் தள்ளினான்.

ஆனால் மனிதனின் பாவத்திற்குப் பரிகாரம் செய்ய வந்த சர்வேசுரனுடைய திருச்சுதனும், அவருடைய திருத்தாயாரும் பாவத்தை "அறியாதிருந்ததாலும்," தங்கள் "சுதந்திரத்தைக்" கடவு ளுக்கு அர்ப்பணித்ததாலும், மனிதன் செய்த பாவத்திற்குப் பரிகாரம் செய்தார்கள். சேசுநாதர் தேவ சுதன் என்ற முறையில் பாவம் அணுக இயலாதவராக இருந்தார், தேவ அன்னை அவரது தாயாயிருக்கத் தகுதி பெறும்படி "அமல உற்பவியாகப்" பாதுகாக்கப்பட்டார்கள். இவ்வாறு,

இவர்கள் இருவரும் பாவத்தை "அறியாதிருந்தார்கள்." அவ்வாறே தேவ திருச்சித்தத்திற்கு முழுவதுமாகப் பணிந்திருந்ததன் மூலம், "சுதந்தரத்தின்" ஆங்காரத்தின்மீதும் அவர்கள் வெற்றி கொண்டார்கள். "என் சித்தப்படியல்ல, உமது சித்தப்படியே ஆகக்கடவது," "உம்முடைய வார்த்தையின்படியே எனக்கு ஆகக்கடவது" என்னும் வார்த்தைகளில் கடவுளுக்கு அடிமைத்தனம் என்னும் உண்மையான சுதந்திரத்தை அவர்கள் தேர்ந்துகொண்டார்கள். இவ்வாறு, சேசுவும், அவரோடு இணைந்து மாமரியும், மனுக்குலம் இழந்திருந்த உண்மையான சுதந்திரமாகிய இரட்சணியத்தை அதற்குப் பெற்றுக்கொடுத்தார்கள்.

இன்றும் மனிதர்களை வீழ்த்த இதே ஆயுதங்களைத்தான் சாத்தான் பயன்படுத்துகிறான். விஞ்ஞான வளர்ச்சியை முழுவதுமாகத் தனக்கு அடிமையாக்கி, அவன் சகல அசுத்தங்களைப் பற்றிய அறிவாலும் மனிதனை, குறிப்பாக, குழந்தைகளையும், இளம்பருவத்தினரையும் நிரப்புகிறான். ஐம்பது ஆண்டுகளுக்கு முன் கற்பனை கூட செய்திருக்க முடியாத அளவில், இன்று அவன் பாவத்தைத் தொலைக்காட்சி, வலைத்தளம், மிகக் குறிப்பாக, கைபேசி என்னும் பயங்கரங்களின் மூலம் வீட்டு வரவேற்பறைக்குள் மட்டுமின்றி, குழந்தைகளின் மனங்களுக்குள்ளும் மிக எளிதாக நுழையச் செய்கிறான். குழந்தைகள் கைபேசியைப் (இதற்கு வேறு பெயர் கண்டுபிடிக்கப்பட வேண்டும், ஏனெனில் இக்கருவி பேசுவதற்கல்ல, மாறாக, கேட்டல், பார்த்தல், "தீமையை அறிதல்" என்பவற்றிற்கே அதிகமாகப் பயன்படுத்தப்படுகிறது.) பயன்படுத்துவதைப் பெற்றோர் தடுக்க இயலாத படி, வலைத்தளக் கல்வி என்ற ஒரு பெரும் ஆபத்தை அவன் கத்தோலிக்கப் பள்ளிகளிலும் கூட அறிமுகப்படுத்தி விட்டான். **ஏக மெய்யான கடவுளையும், அவர் அனுப்பினவராகிய சேசுக் கிறீஸ்துவையும் அறிந்துகொள்வதே நித்திய ஜீவியம்** (அரு.17:3) என்ற சத்தியத்தை முழுவதுமாக மனிதர்களிடமிருந்து மறைப்பதே அவனது முக்கிய அலுவலாக இருக்கிறது.

இதில் இன்று அவன் பெருமளவு வெற்றியும் பெற்றிருக்கிறான் என்பது தெளிவு. இன்று கிறீஸ்தவர்களிடம், குறிப்பாகக் குழந்தைகளிடம் கடவுளைப் பற்றிய அறிவு இல்லை. தேவ கட்டளைகளுக்குக் கீழ்ப்படிதல் இல்லை. இதற்கு நேர்மாறாக, தங்கள் சரீரத்தையும், உலகத்தையும் பற்றிய அறிவு அவர்களிடம் மிகுந்திருக்கிறது. இதைக் குறித்து அவர்கள் பெருமையும் கொள்கிறார்கள். பலர் பல ஒளிக் காட்சிகளில் பாவம் ஏதுமில்லை என்று நம்புகிறார்கள். ஆனால், வெறுமனே "கண்களின் இச்சையும் விபச்சாரமே" (மத். 5:28) என்பதையும், கண்கள் சாத்தான் ஆத்துமத்தின் நுழையப் பயன்படுத்தும் வாசல்கள் என்பதையும் அவர்கள் மறந்து விடுகிறார்கள்.

இந்த நிலை மாற வேண்டும். மனிதர்கள் மாமரியின் வழியாக சேசுவுக்குத் தங்களை முழு அர்ப்பணம் செய்ய வேண்டும். இதை வெறுமனே ஒரு வாடிக்கையாகவோ, பக்தி முயற்சியாகவோ அவர்கள் செய்யக்கூடாது. மாறாக, முழு அர்ப்பணம் என்பது ஜீவியத்தைத் திருத்திக்கொள்வதும், நம் ஜீவியத்தில் சேசுவையும், மாதாவையும் கண்டுபாவிப்பதும் ஆகும். இவ்வாறு அவர்கள் தங்கள் "சுதந்திரத்தை" விலக்கி, கடவுளின் அடிமைகளாகத் தங்களை ஆக்கிக்கொள்ள வேண்டும். முக்கியமாக, பாவத்தை அறியாதிருக்கும் சுதந்திரத்தை அவர்கள் பெற்றுக்கொள்ள வேண்டும். இது இன்றைய உலகில் மிகவும் கடினமானதாகத் தோன்றலாம். ஆனால் சர்வேசுரனால் ஆகாதது ஒன்றுமில்லை, அவராலன்றி நம்மால் எதுவும் செய்ய இயலாது, ஆனால் நம்மைப் பலப்படுத்துகிறவரைக் கொண்டு எதையும் செய்ய நம்மால் ஆகும் (லூக்.1:37; அரு. 15:5; பிலி. 4:13).

ஆகையால், சகோதரரே, அறிவையும், சுதந்திரத்தையும் கொண்டு மனுக்குலத்தை அழிக்க முயலும் பசாசை, பாவத்தைப் பற்றிய அச்சத்தாலும், தீமையை அறியாதிருக்கும் சுதந்திரத்தாலும் நாம் வெற்றிகொள்வோமாக.

மரியாயே வாழ்க.

# குழந்தை சூசை தேவாலயத்தில் காணிக்கையாக ஒப்புக்கொடுக்கப்பட்டது.

**கன்னிகையான மரிய செசீலியா பெய்ஜுக்கு வெளிப்படுத்தப்பட்ட அர்ச். சூசையப்பரின் வாழ்க்கை வரலாறு என்ற புத்தகத்திலிருந்து எடுக்கப்பட்டது.)**

*தாய்மாரின் சுத்திகரம் தொடர்பாக மோயீசனின் திருச்சட்டம் நியமித்த காலம் நிறைவுற்ற போது, சூசையின் பெற்றோர் அவரோடு ஜெருசலேமுக்குப் புறப்பட்டார்கள். சூசையின் தாய் தன் சுத்திகரத்திற்காகவும், தன் மகனைக் காணிக்கையாக ஒப்புக்கொடுத்து, சட்டப்படி காணிக்கை தந்து அவரை மீட்டுக்கொள்ளவும் ஆலயத்திற்குச் சென்றாள். அவர்கள் கடவுள் இப்பேர்ப்பட்ட ஒரு குழந்தை யைத் தந்ததற்காகத் தங்கள் நன்றியை வெளிப்படுத்தும் அடை யாளமாக, வழக்கத்தை விட மிக அதிகமான நற்கொடைகளை ஆலயத்திற்குக் கொண்டு வந்திருந்தார்கள்.*



*இந்தப் பயணம் முழுவதும் சூசையப்பரின் முக பாவனை அவரது அசாதாரணமான மகிழ்ச்சியையும் சந்தோஷத்தையும் வெளிப்படுத்துவதாக இருந்தது. இது அவரது பெற்றோர் இருவருக்கும் மிகுந்த ஆறுதல் தந்தது. அவரது ஆத்துமத்தில் வரப்பிரசாதம் எப்படித் தன்னை பொழிந்து கொண்டிருந்தது என்பதை அவர்கள் உணர்ந்தார்கள். இந்த இளம் வயதிலேயே அது இவ்வளவு அதிகமாகத் தன்னை வெளிப்படுத்திக்கொண்டிருந்தது என்றால், அவருக்கு அதிக வயதாகும்போது, இன்னும் எவ்வளவு அதிகமான வரப்பிரசாத வெளிப்பாட்டை அவரிடம் எதிர் பார்க்க முடியும்! இது அவருடைய பெற்றோருக்கு, தங்களில் கடவுளின் மீது இன்னும் அதிக மான அன்பையும், நன்றியறிதலையும் தூண்டிக் கொள்வதற்கான ஓர் உந்துதலாக இருந்தது.*

*தனது சுத்திகரச் சடங்கின்போது, சூசையின் தாய் தன் மகன் பெற்ற தேவ கொடைகளைப் பற்றி அதிகமான ஞான உணர்த்துதல்களைப் பெற்றுக்கொண்டாள். யூத குரு சூசையைத் தம் கரங் களில் ஏந்தி, கடவுளுக்கு ஒப்புக்கொடுத்தபோது, ஓர் அசாதாரணமான சந்தோஷ உணர்வையும், ஞான ஆறுதலையும் அனுபவித்தார். அவர் தம் உள்ளரங்கத்தில் ஒளிர்விக்கப்பட்டு, இந்தக் குழந்தை கடவுளின் கண்களில் எவ்வளவு பிரியத்திற்குரியவராக இருந்தார் என்பதை அறிந்துகொண்டார். சூசையின் கண்கள் திறந்திருந்தன, அவை பரலோகத்தை நோக்கி உயர்த்தப்பட்டிருந்தன.*

*அவர் முழு இருதயத்தோடு தம்மையே கடவுளுக்குக் காணிக்கையாக ஒப்புக்கொடுப்பதன் மூலம் குருவின் ஒப்புக்கொடுத்தலோடு தம்மை இணைத்துக்கொண்டார். இந்த முழு ஆடம்பரச் சடங்கின்போதும், அவர் முழுமையாகக் கடவுளுக்குள் பொதிந்துகொள்ளப்பட்டார். கடவுள் அவரில் தேவ வரப்பிரசாத வாழ்வை அதிகரித்த அதே சமயத்தில் அவருக்கு ஒரு சிறப்பான ஞான வெளிச்சத்தையும் தந்தருளினார். அதன் மூலம், தமது முழுமையான அர்ப்பண நேரத்தில் கடவுள் மிக தாராளமான முறையில் தமக்குத் தந்தருளிய கொடை எவ்வளவு உயர்ந்ததும் பக்திக்குரியது மானதாயிருந்தது என்பதை அவர் உய்த்துணர்ந்தார். ஆகவே அவர் மீண்டும் பக்தியுருக்கத்தோடு கடவுளுக்கு நன்றி செலுத்தினார்.*

அவரது பெற்றோர் வழக்கமான காணிக்கையைச் செலுத்தி, அவரை மீட்டுக்கொண்டார்கள். குரு குழந்தையைத் தாயிடம் திருப்பித் தந்தபோது, அவள் நல்ல கவனத்தோடு அவரை வளர்த்து வர வேண்டுமென்றும், அவர் மீது தனி கவனம் செலுத்தி வர வேண்டும் என்றும் அவளுக்கு அறிவுறுத்தினார். ஏனெனில் இந்தக் குழந்தை தனிப்பட்ட முறையில் கடவுளுக்குப் பிரியமான வராக இருப்பார் என்பதும், பெரிய காரியங்களுக்காகக் கடவுள் அவரை நியமித்திருக்கிறார் என்பதும் அவருக்கு வெளிப்படுத்தப்பட்டிருந்தது; மேலும், இக்குழந்தை தமது அசாதாரணமான குணநலன்களின் காரணமாக, ஒரு நாள், தம்மோடு தொடர்பு கொள்ளவிருந்த அனைவருக்கும் மிகுந்த ஆறுதலின் காரணமாக இருப்பார் என்பதையும் அந்தக் குரு கண்டுணர்ந்தார்.

இதெல்லாம் உண்மைதான் என்பதைப் பிற்காலம் நிரூபித்தது. உண்மையில், சூசையப்பர் வாழ்வில் தம்மோடு தொடர்பு கொண்டவர்களுக்கு மட்டுமின்றி, எதிர்காலத்தில் தம்மீது அன்பும், பக்தியும் உள்ளவர்களாக இருக்கவிருக்கும் அனைவருக்கும் கூட மிகுந்த ஆறுதலைக் கொண்டு வந்தார். இறப்பவர்களின் பாதுகாவலராக இருக்கும்படி கடவுள் அவரை நியமம் செய்திருந்த தால், அவர் ஒருநாள், மரணத்திற்கு எதிரான போராட்டத்தில் அவர்களுக்கும் பயனுள்ள முறை யில் ஆறுதலும், பலமும் வருவிப்பவராக இருப்பார்.

குழந்தை தங்களிடம் திருப்பித் தரப்பட்டவுடன், பெற்றோர், தங்கள் இருதயங்கள் ஆழமாகத் தொடப்பட்டதாலும், மகிழ்ச்சியால் நிரப்பப்பட்டதாலும், கண்ணீர் சிந்தியபடி, கடவுளுக்கு நன்றி செலுத்தினார்கள். அவர்கள் சூசையை ஒரு பொக்கிஷமாக, தெய்வீகமான விதத்தில் தங்களுக்குத் தந்தருளப்பட்ட ஒரு கொடையாகச் சுமந்துகொண்டு வீடு திரும்பினார்கள். சின்ன சூசை வீடு திரும்பும் பயணத்தில், கடவுளில் முழுமையாகப் பொதியப்பட்டவராக, மிகவும் அமைதி யாக இருந்தார். தேவசிநேக வளர்ச்சியில் மிகுந்த முன்னேற்றம் காண தமக்கு உதவிய வரப்பிர சாதங்களுக்காக அவர் கடவுளுக்கு நன்றி செலுத்தினார். தாம் மிகவும் நேசித்த சகல புண்ணியங் களையும் அனுசரிப்பது அவருக்கு (வயதின் காரணமாக) சாத்தியமற்றதாக இருந்தபோதிலும், அவற்றிற்காக ஆசை கொள்வதில் தம்மைப் பயிற்றுவிக்க அவர் கடுமையாக முயன்றார். போதிய முதிர்ச்சி அடையும் வரையில் அவர் இப்படிச் செய்து வந்தார். அதற்குப் பிறகு, அவர் அவற்றை மிகுந்த உத்தமமான முறையில் அனுசரித்து வந்தார்.

தொடரும்.

## தேவ அழைத்தல்: பெற்றோருக்கு அறிவுரை

தாய்த் திருச்சபை தனது பிள்ளைகளின் சுயாதீனத்தை எந்த அளவுக்கு மதிக்கிறது என்றால், பலவந்தத்தினாலோ, அல்லது பயமுறுத்தியோ, நியாயமான காரணமின்றி, யாராவது துறவற அல்லது குருத்துவ அந்தஸ்தில் தங்கள் பிள்ளைகள் உட்படுவதைப் பெற்றோர் தடுப்பார்கள் என்றால், திரிதெந்தீன் பொதுச் சங்கம் அவர்களைத் திருச்சபை விலக்கத் தண்டனைக்கு உள்ளாக்குகிறது.

## தேவ அழைத்தலுக்குரிய வயது

அர்ச். ஆசீர்வாதப்பர் துறவற மடத்தில் பிரவேசித்தபோது, அவருக்கு வயது வெறும் பன்னிரண்டு மட்டுமே. அர்ச். தாமஸ் அக்குயினாஸ் துறவறத்தில் உட்பட்டபோது, அவருக்குப் பதினான்கு வயதே நிரம்பியிருந்தது. அர்ச். குழந்தை சேசுவின் தெரேசம்மாள் கார்மெல் மடத்தில் சேர்ந்தபோது அவளுக்கு வயது பதினைந்து. பதினாறு வயதுக்கு மேற்பட்டவர்களால்தான் கடவுளுக்குத் துறவற வார்த்தைப்பாடு கொடுக்க முடியும். ஆனால் அதற்கு முன்னதாகவே துறவற ஜீவியத்தில் பிரவேசிக்கப் பரிசுத்த திருச்சபை தடையேதும் விதிக்கவில்லை.

# நாமும் அர்ச்சியசிஷ்டவர்கள் ஆகலாம்!



அர்ச்சியசிஷ்டவன் ஆக முதலாவதும், மிக எளிதும், நிச்சயமுமான வழி கடவுளை நேசிப்பதாகும். நாம் கடவுளின் நேசத்தை முழுமையாக அறிய வேண்டும். கடவுளை நேசிப்பது தான் நம் வாழ்வின் மாபெரும் அலுவலாகவும், நம் ஒரே ஒரு அலுவலாகவும் இருக்கிறது.

ஒரே ஒரு சிறு தேவசிநேகச் செயலின் மதிப்பு விலை மதிக் கப்படாதது. ஒரு தேவ சிநேகச் செயல் மற்ற புண்ணியங்களின் ஒராயிரம் செயல்களைவிட அதிக மதிப்புள்ளது. நித்திய வெகுமானத் தைப் பெற்றுத் தரக்கூடிய ஒரு நேசச் செயலை எந்த ஒரு சாதா ரணக் கிறீஸ்தவனும் ஒரே கணத்தில் செய்துவிட முடியும் என்று ஆண்டவர் பெனிஞ்ஞா கொன்ஸோலாத்தாவிடம் கூறினார். நாம் எந்தக் கஷ்டமுமின்றி தினமும் எண்ணற்ற நேசச் செயல் களைச் செய்ய முடியும். மேலும், ஒராயிரம் பயங்கர தேவ தூஷணங்கள் தரும் வேதனையை விட ஒரே ஒரு நேசச் செயல் தமக்கு அதிக மகிமையையும், இன்பத்தையும் தருவதாகவும் அவர் அவளிடம் கூறினார். இது தவிர, தேவசிநேகம் நம் பாவங் களை அகற்றுகிறது. ஒரு சுருக்கமான தேவசிநேக ஜெபம் நல்ல கள்ளனுக்கு அன்றே கிறீஸ்து நாதரோடு பரகதியில் இருக்கும் வாக்குறுதியைப் பெற்றுத் தந்தது.

ஆனால், தேவசிநேகமின்றி வேறு நோக்கத்திற்காக நாம் செய்யும் எந்தக் காரியமும் மதிப் பற்றதாக இருக்கிறது. நாம் பல வருடங்கள் கடுமையாக உழைக்கலாம், அதனால் மனிதர்களிட மிருந்து பெரும் புகழ்ச்சியையும், மரியாதை வணக்கத்தையும் பெறலாம், ஆனால் அது தேவ அன்பிற்காகச் செய்யப்படவில்லை என்றால், அது மதிப்பற்றதாகவே இருக்கும்.

கடவுளை நேசிப்பது மிக எளிது, ஏனெனில் தம்மை நேசிக்கவும், நம் முழு இருதயங் களோடும், ஆன்மாக்களோடும் தம்மை நேசிக்கவுமே அவர் நம்மைப் படைத்தார். அளவற்ற சகல நன்மைச் சுரூபியும், இனியவரும், நம்மைக் கனிவோடும் பாசத்தோடும் நேசிப்பவரும், அனை வரிலும் அதிகப் பிரியமும், அதிக நேசமும் கொண்ட நம் தந்தையும், அனைவரிலும் மிகச் சிறந்த, மிக உண்மையான நண்பருமான கடவுளை நேசிப்பது அதிக எளிதான காரியம். அவரை நேசிக்க நமக்குத் தேவைப்படுவதெல்லாம் அவரது நன்மைத்தனத்தைப் புரிந்துகொள்வது மட்டுமே.

நம் முழு இருதயத்தோடும், ஆத்துமத்தோடும், பலத்தோடும், மனதோடும் சர்வேசுரனை நேசிப்பது, முதலாவது தேவ கட்டளையும், நம் பரிசுத்த வேதத்தின் சாரமுமாக இருக்கிறது. பரிபூரண இரக்கமும், ஞானமுமுள்ள சர்வேசுரன் கடினமானதும், மிகச் சிரமமானதுமான ஒன்றைத் தம் பரிசுத்த வேதத்தின் முதல் நிபந்தனையாக ஒருபோதும் ஆக்கியிருக்க மாட்டார்.

தங்களால் கடவுளை நேசிக்க இயலாதென்று கூறும் மனிதர்கள் இருக்கிறார்கள். அவர்கள் ஒரு நேசச் செயலைச் செய்து, **"என் தேவனே, நான் உம்மை நேசிக்கிறேன்"** என்று சொல்லும்போது, தேவசிநேகத்தை அவர்கள் தங்கள் இருதயங்களில் உணர்வதில்லை. அவர்களுடைய வார்த் தைகள் உள்ளே வெறுமையாக ஒலிக்கின்றன.

இதற்கு நான்கு காரணங்கள் இருக்கின்றன: (1) அவர்கள் கடவுளை நேசிப்பதற்கு அவரது உதவியை அவரிடம் கேட்பதில்லை. (2) கடவுள் யார் என்பதையும், அவருடைய மட்டற்ற

நன்மைத்தனத்தையும், அவருடைய இனிமையையும், இரக்கத்தையும், நேசத்தையும் அவர்கள் உணர்வதில்லை. *(3)* அவர் தங்களை எவ்வளவு அதிகமாக நேசிக்கிறார் என்பதை அவர்கள் புரிந்துகொள்வதில்லை. *(4)* அவர் தங்களுக்காகச் செய்துள்ள எதையும் அவர்கள் அறிவதில்லை.

உணர்ச்சிபூர்வமான ஓர் அன்பைப் பற்றியல்ல, கடவுள் எவ்வளவு நல்லவரும் இனியவருமாயிருக்கிறார் என்பது பற்றிய தெளிந்த அறிவிலிருந்து எழும் திடமான தேவசிநேகத்தைப் பற்றியே நாம் பேசுகிறோம். தேவசிநேகத்தைச் சம்பாதித்துக்கொள்ளும் வழிகள்: *(1)* ஜெபம். கடவுளின் மீது உண்மையான, உருக்கமான நேசத்தை நமக்குத் தருமாறு, ஒவ்வொரு நாளும், நாம் சொல்லும் ஒவ்வொரு ஜெபத்திலும் அவரிடம் மன்றாடுவோமாக. இதற்காகவே நாம் செய்யும் ஒவ்வொரு நற்செயலையும் ஒப்புக்கொடுப்போமாக. நம் காலை, மாலை ஜெபங்களிலும், நம் ஜெப மாலையிலும், திவ்ய பலிபூசையிலும், நாம் உட்கொள்ளும் திவ்ய நன்மைகளிலும், தேவசிநேக வரமே நமது மிகுந்த ஏக்கமுள்ள மன்றாட்டாக இருக்கட்டும். இதைத் தனிப்பட்ட விருப்பமாகவும், கருத்தாகவும் கொண்டிராத எந்த ஜெபத்தையும் நாம் ஒருபோதும் சொல்லாதிருப்போமாக.

நம் ஆண்டவர் தமது நேசத்தைப் போல வேறெதையும் அவர் நமக்கு மிகுந்த விருப்பத்தோடும், தாராளத்தோடும் தருவதில்லை. நம் விருப்பத்திற்கும் அதிகமாகவே இந்த மாபெரும் வரப்பிரசாதத்தை நமக்குத் தர அவர் விரும்புகிறார். நாம் செய்ய வேண்டியதெல்லாம் இடைவிடாமல் அதை மன்றாடிக் கேட்பது மட்டுமே. இதைச் செய்வோம் என்றால், நம் இருதயங்கள் எவ்வளவுதான் குளிர்ந்து போயிருந்தாலும், அவை அவருடைய நேசத்தில் படிப்படியாக வளரும், தங்கள் முழு பலத்தோடும் அவை அவரை நேசிக்கும், தேவ சிநேகத்தால் நிரம்பி வழியும். அவை தேவசிநேகம் என்ற வார்த்தையின் பரிபூரணப் பொருளில் அவரை நேசிக்கும்.

*(2)* கடவுளை நேசிக்க, நாம் அவரை அறிய வேண்டும். அவர் அளவற்ற இனிமையும், இரக்கமும், அன்பும் உள்ள கடவுள், நம்மைத் தூக்கியெடுத்து, நம் ஆன்மாக்களிலிருந்து பாவக் கறைகளைக் கழுவிப் போக்க விரும்பும் கடவுள் என்பதை நாம் அறிந்திருக்க வேண்டும்.

எல்லாவற்றிற்கும் மேலாக, கடவுளை நாம் அனைவரிலும் அதிக அன்புள்ள தந்தையாகவும், அனைவரிலும் அதிகப் பிரியமுள்ள நண்பராகவும் காண வேண்டும். அவரில் நாம் மட்டற்ற நம்பிக்கை கொள்ள வேண்டும், நம் பிரச்சினைகள் அனைத்திலும் அவரிடமே செல்ல வேண்டும், நம் எல்லாத் தேவைகளிலும் அவருடைய உதவியை நாம் நாட வேண்டும். நாம் ஊழியர்களாக அன்றி, அவருடைய பிரியமுள்ள குழந்தைகளாக அவருக்கு ஊழியம் செய்ய வேண்டும். நாம் கடவுளை ஆராதிக்கிறோம், ஆயினும் நேச அக்கினிச் சுவாலைகளால் பற்றியெரியும் பரலோக சம்மனசுக்களின் ஆராதனையைப் போல நம் ஆராதனை அன்பின் ஆராதனையாக இருப்பதில்லை. அவர்கள் சர்வேசுரனை அவர் இருக்கிறபடியே காண்கிறார்கள், அப்படி அவரைக் காண்பது சந்தோஷம், மகிழ்ச்சி ஆகியவற்றின் பெருங்கடலால் அவர்களை நிரப்புகிறது.

தேவதூதர்களும், அர்ச்சியசிஷ்டவர்களும் பரலோகத்தில் தரிசிக்கிற கடவுளை ஒரே ஒரு கணம் நாம் பார்த்தாலும் நம் ஆத்துமங்கள் எத்தகைய பேரின்பத்தால் ஆக்கிரமிக்கப்படும் என்றால், அவை நம் சரீரங்களிலிருந்து தங்களைப் பிய்த்தகற்றிக்கொண்டு அவரை நோக்கிப் பறந்தோடும். பரலோகவாசிகளைப் போலவே நாமும் விரைவில் அவரைக் காண்போம், ஆனால் தற்போதைக்கு நாம் நம் விசுவாசத்தைப் பயன்படுத்துவோம், அதை அனுபவித்து மகிழ்வோம், இவ்வாறு பரலோகப் பேரின்பத்தை எதிர்பார்த்துக் காத்திருப்போம். மரியாயே வாழ்க!

*(An Easy Way to Become A Saint என்ற நூலிலிருந்து எடுக்கப்பட்டது.)*

# அறிந்துகொள்வோம் பாத்திமா செய்தியை!

*1917, ஜூலை 13 அன்று நிகழ்ந்த தனது மூன்றாம் காட்சியில், நம் திவ்ய அன்னை ஆத்துமங்களுடையவும், உலகத்தினுடையவும், திருச்சபையினுடையவும் எதிர்காலங்களைத் தன்னுள் அடக்கிய மூன்று பிரிவுகளைக் கொண்ட ஒரு மாபெரும் இரகசியத்தைக் குழந்தைகளுக்கு வெளிப்படுத்தினார்கள். இந்த இரகசியம் எடுத்த எடுப்பிலேயே மாதாவைப் பற்றிய ஆதி வாக்குத்தத்தத்தை வெளிப்படுத்துகிறது: "உனக்கும், ஸ்திரீக்கும், உன் வித்துக்கும், அவள் வித்துக்கும் பகையை உண்டாக்குவோம்..." என்ற இந்த தேவ வாக்குறுதியின்படி, பாத்திமா இரகசியத்தின் முதல் பிரிவில், ஆத்துமங்களை நரகத்திற்கு இழுத்துச் செல்லத் துடிக்கும் பசாசுக்கு எதிராக, ஸ்திரீயாகிய மாமரியின் மாசற்ற இருதயம் கடவுளால் முன்னிறுத்தப்படுகிறது!* **"பரிதாபத்திற்குரிய ஆத்துமங்கள் செல்லும் நரகத்தை இப்போது கண்டீர்கள். அவர்களைக் காப்பாற்ற, உலகில் என் மாசற்ற இருதய பக்தியை ஏற்படுத்தக் கடவுள் விரும்புகிறார்!"**



*தேவ அன்னையின் இந்த வாக்கியத்தில் அவர்களே சாத்தானுக்கு எதிராக ஆதி. 3:15ல் முன் குறிக்கப்பட்ட ஸ்திரீ என்ற உண்மை முழு வீச்சில் வெளிப்படுத்தப்படுவதைக் காணுங்கள். இங்கே இரு படையணிகள் இருக்கின்றன. ஒன்றின் தளகர்த்தராக, தன் திருக்குமாரனின் சிலுவைக் கொடியைத் தாங்கி நிற்கிற மாதா இருக்கிறார்கள். அவர்களுக்கு எதிராக, பசாசின் நரக சேனை நிற்கிறது. இவை இரண்டில் ஒன்றை இன்றே, இப்போதே நாம் தேர்ந்துகொள்ள வேண்டும் என்பதுதான் பாத்திமா நமக்குத் தருகிற முதலாவதும், மிக முக்கியமானதுமான செய்தி! ஏனெனில் நம் நித்திய ஜீவியம் அல்லது நித்திய தண்டனை இதில்தான் அடங்கியிருக்கிறது! தேவ மாதாவையும், அவர்கள் பாத்திமாவில் நமக்கு விடுத்த வேண்டுகோள்களையும் புறக்கணிக்கிற யாரும் பரலோக பாக்கியத்தை ஒருபோதும் பெற்றுக்கொள்வது மிகவும் அரிது.*

*இனி, எந்த மனநிலையோடு மாமரியின் வேண்டுகோள்களுக்கு நாம் செவிகொடுக்க வேண்டும் என்பது பற்றி நாம் பார்ப்போம்: முதலாவதாக, நாம் மாதாவின் அன்புப் பிள்ளைகள். பாவ வாழ்வு வாழ்ந்து, நரகத்திற்குச் செல்லும் ஆபத்தில் இருக்கும் தனது எண்ணற்ற பிள்ளைகளைக் கண்டு நம் மாதாவின் மாசற்ற திரு இருதயம் இரத்தம் வடிக்கிறது. அவர்களை அந்த நித்திய அக்கினியிலிருந்து எப்படியாவது காப்பாற்ற அது துடிக்கிறது! அதற்காக திவ்ய கன்னிகை தன் பிள்ளைகளாகிய நம்மிடம் திரும்பி, தன்னோடு சேர்ந்து ஜெப, தவ, பரிகார முயற்சிகளைச் செய்து, இந்தப் பரிதாபத்திற்குரிய பாவிகளின் ஆத்துமங்களை இரட்சிப்பதில் தனக்கு உதவுகிற "சிறிய இரட்சகர்களாக" இருக்கும்படி நம்மிடம் கேட்கிறார்கள். எனவே, நம் சொந்த "அம்மா"வோடு சேர்ந்து, ஆன்ம இரட்சணியப் பணியில் ஈடுபடுகிறோம் என்ற உணர்வு நம்மில் புதுப்பிக்கப்பட வேண்டும். இந்த உணர்வு இன்றிச் செய்யப்படும் பரிகாரம் எதுவும் பெரிய அளவில் பயன் தராது.*

*இரண்டாவதாக, பாத்திமா தவ முயற்சிகளைச் செய்யும்போது, சேசுவின் திரு இருதயமும், மரியாயின் மாசற்ற இருதயமுமாகிய இரு இருதயங்களுக்கும் எதிரான பாவங்களுக்கு நாம் பரிகாரம் செய்கிறோம் என்பதை நாம் சிந்திக்க வேண்டும். இந்த இரு இருதயங்களும் ஒன்றாகவே துடிக்கின்றன. இவை இரண்டு இருதயங்கள் அல்ல, ஒரே இருதயம்தான் என்னும் அளவுக்கு தேவ*

அன்பின் ஒரே தசை நார்களால் இணைக்கப்பட்டுள்ளன. மனிதர்களின் பாவ முட்கள் மரியாயின் மாசற்ற இருதயத்தைக் குத்தித் துளைக்கும்போதெல்லாம் சேசுநாதர் பரிதவிப்போடு நம்மிடம் திரும்பி, "நன்றியற்ற மனிதர்களின் பாவ முட்களால் ஒவ்வொரு கணமும் துளைக்கப்படுகிற உங்கள் மிகப் பரிசுத்த மாதாவின் இருதயத்தின்மீது இரக்கம் கொள்ளுங்கள். ஒரு பரிகாரச் செயலின் மூலம் அவற்றை அகற்றுபவர்கள் யாருமில்லை" என்கிறார் (1925, டிசம்பர் 10, போந்தவேத்ரா காட்சி). அதே பாவங்களால் தன் திருக்குமாரன் அனுபவிக்கும் வேதனையைக் காண்கிற தேவ மாதாவும் நம்மிடம் திரும்பி, ஆழ்ந்த துக்கத்தோடு, "நீங்கள் உங்கள் வாழ்க்கையைத் திருத்திக் கொண்டு, உங்கள் பாவங்களுக்காகக் கடவுளிடம் மன்னிப்புக் கேட்க வேண்டும்... ஏற்கெனவே மிகவும் நொந்து போயிருக்கிற ஆண்டவராகிய நம் சர்வேசுரனை இதற்கு மேலும் நோகச் செய்யாதீர்கள்" என்கிறார்கள் (13.10.1917 கடைசிக் காட்சி).

ஆகவே, சேசு, மரியாயின் திரு இருதயங்களை நேசித்து, அவற்றுக்கு ஆறுதல் அளிப்பதுதான் நம் முதல் சனி பரிகார பக்தியின் நோக்கமாக இருக்க வேண்டும். இதனாலேயே, "ஓ சேசுவே, உமது அன்பிற்காகவும், பாவிகள் மனந்திரும்புவதற்காகவும், மரியாயின் மாசற்ற இருதயத்திற்கு எதிராகக் கட்டிக் கொள்ளப்படும் பாவங்களுக்குப் பரிகாரமாகவும் இதைச் செய்கிறேன்" என்று அடிக்கடி ஜெபிக்கும்படி மாதா கற்பித்தார்கள். இப்படி நாம் தரும் ஆறுதல், மிக ஏராளமான ஆத்துமங்களை நரக நெருப்பிலிருந்து காப்பாற்றும் வல்லமை மிக்க ஆயுதமாக இந்தத் திரு இருதயங்களால் பயன்படுத்தப்படுகிறது என்பதை நாம் உணர வேண்டும். இதன் மூலம், எல்லாவற்றிற்கும் மேலாக, நம்முடைய நித்தியப் பேரின்பமும் உறுதிப்படுத்தப்படுகிறது!

## பாத்திமா செய்திகளின் அடிப்படையில் தவம் செய்யும் விதம்

கடவுளுக்கும், சேசுவின் திரு இருதயத்திற்கும், மரியாயின் மாசற்ற இருதயத்திற்கும், நம் தவ முயற்சிகளாலும், பரித்தியாகங்களாலும் பரிகாரம் செய்து, அவர்களை நேசிக்க நாம் கடமைப் பட்டிருக்கிறோம். பாவங்கள் கடவுளுக்கு எதிராகச் செய்யப்படுகின்றன. தேவ கட்டளைகள் கடவுளை நேசிப்பதே நம் கடமையென அறிவிக்கின்றன. அவற்றை மீறும்போது, நாம் அவரை நோகச் செய் கிறோம்; நம்மை நேசிக்கும் தந்தையை நிந்திக்கிறோம். மேலும் கடவுளின் அன்பின் பிரதிபலிப் பாக இருக்கும் சேசுவின் திரு இருதயம் பாதிக்கப்படுகிறது, மாசற்றதனத்தாலும், இரத்த உறவாலும், இரட்சணியத்தின் ஒத்துழைப்பாலும் அந்தத் திவ்ய இருதயத்துடன் ஒன்றாக இருக்கிற மரியாயின் மாசற்ற இருதயமும் பாவத்தாலும், தான் புறக்கணிக்கப்படுவதாலும் மிகவும் பாதிக்கப்படுகிறது. சேசுவின் திரு இருதயத்தின் அன்பை பாவம் நோகச் செய்கிறது. அதேபோல் மாதாவுக்கு நம்மீதுள்ள தாயன்பையும் வேதனைப்படுத்துகிறது. மாதாவின் வேதனை சேசுவின் துயரம் தருகிறது.

பாத்திமா குழந்தைகள் தவ வாழ்வுக்கு படிப்படியாக, ஆனால் தீவிரமாகத் தயாரிக்கப்பட் டார்கள். தூதரின் இரண்டாம் காட்சியில், "செபங்களையும் பரித்தியாகங்களையும் உன்னதருக்கு ஒப்புக்கொடுங்கள்" என்று அவர்களுக்குக் கூறப்பட்டது. சம்மனசானவர் நம் அனைவரையும் நோக்கி: "நீங்கள் செய்யும் யாவற்றையும் ஒறுத்தல் முயற்சி ஆக்குங்கள். கடவுளை நோகச் செய் யும் பாவங்களுக்குப் பரிகாரமாகவும், பாவிகள் மனந்திரும்பும்படி மன்றாட்டாகவும் அவற்றை ஒப்புக்கொடுங்கள். யாவற்றிற்கும் மேலாக, நமது ஆண்டவர் உங்களுக்கு அனுப்பும் துன்பங்களை அமைந்த மனதுடன் ஏற்றுத் தாங்கிக் கொள்ளுங்கள்" என்றார்.

ஆகவே, நமக்கு நடக்கும் அனைத்தும் தவமுயற்சியாக மாற்றப்பட முடியும். நாம் மகிழ்ந் தாலும், துன்புற்றாலும் அது தவமாக்கப்பட முடியும். இவை இரண்டையும், "உன்னதருக்குப்

பாவப் பரிகாரமாகவும், பாவிகள் மனந்திரும்பும்படியாகவும்'' ஒப்புக்கொடுப்பதில்தான் அவை பலன் தருகின்றன. அப்படி ஒப்புக்கொடுக்காவிட்டால் அவை வீணாகின்றன. இவ்வாறு வீணாகும் இன்ப, துன்பங்களுக்குக் கணக்கேயில்லை. பரிசுத்த பாத்திமா மாதா, தாயுள்ளத்துடன் இப்படி நம் வாழ்வு வீணாகப் போகாமல், நம்முடைய இன்ப, துன்பமாகிய அனைத்தையும், பாவப் பரிகாரமாகவும், பாவிகள் மனந்திரும்பும்படியாகவும் சேகரித்துப் பயன்படுத்த விரும்புகிறார்கள்.

மேலும் துன்பத்தைப் பாவப் பரிகாரமாக ஏற்று ஒப்புக்கொடுக்கும்போது அதன் கடுமை குறைந்து விடுகிறது. இன்பத்தைப் பாவப் பரிகாரமாக ஒப்புக்கொடுக்கும்போது, அது மட்டுத் திட்டம் அடைந்து விடுகிறது. ஆயினும் நாம் ஏற்றுக்கொள்ளும் துன்பமே அதிகப் பலன் தருகிறது. மாதா தன் முதல் காட்சியில், ''கடவுளை மனநோகச் செய்யும் பாவங்களுக்குப் பரிகாரமாகவும், பாவிகள் மனந்திரும்பும்படி மன்றாட்டாகவும், அவர் உங்களுக்கு அனுப்பவிருக்கும் துன்பங்களை ஏற்று, அவருக்கு ஒப்புக்கொடுக்க விரும்புகிறீர்களா?'' என்று கேட்டார்கள். மூன்றாம் காட்சியில், ''பாவிகளுக்காக உங்களைப் பலியாக்குங்கள்'' என்றார்கள். நான்காம் காட்சியில், ''பாவிகளுக்காக ஒறுத்தல் முயற்சிகளைச் செய்யுங்கள். ஏனெனில் தங்களுக்காக செபிக்கவும் ஒறுத்தல் செய்யவும் யாருமில்லாததால், அநேக ஆன்மாக்கள் நரகத்திற்குச் செல்கிறார்கள்'' என்றார்கள்.

கடவுள் நமக்கு அனுப்பும் துன்பங்களை அமைந்த மனதோடு ஏற்பது மட்டும் போதாது. நாமும் பரித்தியாக, ஒறுத்தல் முயற்சிகளைத் தேடிச் செய்ய வேண்டும் என்ற உண்மையை மாதாவின் இவ்வார்த்தைகளிலிருந்து அக்குழந்தைகள் புரிந்துகொண்டு, தவ முயற்சிகள் செய்தார்கள். அவர்கள் தங்கள் மதிய உணவை ஏழைகளுக்குத் தந்துவிட்டு, காட்டில் அகப்பட்ட இலை, தழை, கிழங்கு, காய்களைத் தின்றார்கள். கசந்த காய்களைத் தேடித் தின்று, அதனால் அதிக பரித்தியாகம் செய்தார்கள். தாகத்தைத் தாங்கிக்கொண்டார்கள். தலைவலி ஏற்படுத்தும் அரோசிகமான சத்தங்களைப் பொறுத்துக்கொண்டார்கள். வீட்டிலும் வெளியிலும் தவறாக நடத்தப்பட்டபோது தாங்கள் பட்ட வேதனைகள் உட்பட இவை அனைத்தையும் பாவப் பரிகாரமாக அவர்கள் ஒப்புக்கொடுத்தார்கள். ஜசிந்தா, மருத்துவமனையில், தனது இரு விலா எலும்புகள், மயக்க மருந்தின்றி வெட்டி எடுக்கப்பட்ட வேதனையை எவ்வளவு ஆன்ம தாகத்துடன் அமைதியாக தாங்கிக்கொண்டாள் என்பதை நாம் அறிய வேண்டும்.

ஆகவே, தவம் செய்வதில் பாத்திமா குழந்தைகளை நாம் பின்பற்றுவோம். இரத்தம் சிந்தும் அளவுக்குக் கசையடிகளையும், வனவாசத்தையும் மாதா நம்மிடம் கேட்கவில்லை. மாறாக, தொடர்ந்து ஐந்து மாதங்களின் முதல் சனிக்கிழமைகளில் (1) பாவசங்கீர்த்தனம் செய்து, (2) பரிகார திவ்ய நன்மை உட்கொண்டு, (3) 53 மணி ஜெபமாலை ஜெபித்து, (4) கால் மணி நேரம் ஜெபமாலைத் தேவ இரகசியங்களைத் தியானித்தபடி, தன்னுடன் தங்கியிருந்து, இவ்வாறு தனது மாசற்ற இருதயத்திற்கு எதிராகச் செய்யப்படும் நிந்தைகளுக்குப் பரிகாரம் செய்வதாகிய முதல் சனி பக்தியையும், நம் சொந்த சிறு சிறு பரித்தியாகங்களையும்தான் கேட்கிறார்கள். சேசுவுக்காகவும், சேசுவுடனும், மாதாவுக்காகவும், மாதாவுடனும், பாவிகளின் இரட்சணியத்திற்காக தவம், பரித்தியாகம், ஒறுத்தல் இவைகளைச் செய்யும்போது, மாதா இவற்றைப் பயன்படுத்தி, ஆத்துமங்களை நரகத்திலிருந்தும், உலகத்தைத் தப்பறை, போர்கள், இயற்கை அழிவுகள், கொள்ளை நோய்கள், பஞ்சம், பட்டினியிலிருந்தும், திருச்சபையைத் தப்பறைகளிலிருந்தும், விசுவாச மறுதலிப்பிலிருந்தும் பாதுகாப்பார்கள். இதைச் செய்வோம் என்றால், ''இறுதியில் மரியாயின் மாசற்ற இருதயம் வெற்றிபெறும்''போது, அந்த வெற்றியில் நாமும் பங்கு பெறுவோம்.

மரியாயே வாழ்க!

# பெண்கள் பாதங்கழுவும் சடங்கில் பங்கேற்கலாமா?



இந்தக் கேள்விக்குப் பதில் காண்பதற்கு, நம் ஆண்டவர் எதற்காகத் தம் அப்போஸ்தலர்களின் பாதங்களைக் கழுவினார் என்பதைப் புரிந்துகொள்வது அவசியம். பெரிய வியாழனன்று அவர் கத்தோலிக்கத் திருச்சபையின் இருதயமாக விளங்க வேண்டியிருந்த இரண்டு மாபெரும் தேவத் திரவிய அனுமானங்களை ஏற்படுத்தினார். அவற்றில் முதலாவது, நம் ஆண்டவராகவே இருக்கிற **திவ்ய நற்கருணை;** இரண்டாவது, அந்தத் திவ்ய நற்கருணைப் பலியை அவருடைய நினைவாக, அவரைப் போலவே, அவருடைய வல்லமையைக் கொண்டு நிறைவேற்றும்படி, குருக்கள் பெற்றுக் கொண்ட அவருடைய **குருத்துவம்.**

ஆம்! தம் அப்போஸ்தலர்கள் தம்முடைய குருத்துவத்தில் பங்குபெறவும், முதல் திவ்ய பலி பூசையில் பங்குபெறவும் தகுதி பெறுமாறு, அவர்களைப் பரிசுத்தப்படுத்தவும் சேசுநாதர் அவர்களது பாவங்களைத் தாம் மன்னிப்பதன் அடையாளமாக அவர்களுடைய பாதங்களைக் கழுவினார். "ஸ்நானம்பண்ணினவன் (ஏற்கெனவே ஞானஸ்நானம் பெற்றிருப்பவன்) பாதங்களையேயன்றி மற்றொன்றையுங் கழுவ வேண்டுவதில்லை (பாவசங்கீர்த்தனம் செய்வது போதுமானது.). மற்றபடி அவன் முழுதும் சுத்தமாயிருக்கிறான்" (அரு. 13:10) என்ற அவருடைய வார்த்தைகள் இதை நிரூபிக்கின்றன. இந்த விதத்தில் பெரிய வியாழனன்று, நம் ஆண்டவர் பச்சாத்தாபமாகிய தேவத் திரவிய அனுமானத்தையும் மறைமுகமாக ஸ்தாபித்தார் என்று நாம் சொல்ல வேண்டும்.

இந்த குருத்துவம் ஆண்களுக்குரியது என்பதைப் பழைய ஏற்பாடும் பல முறை நிரூபிக்கிறது. மனிதர் கரங்களால் குருத்துவ அபிஷேகம் பெறாதவரும், சாலேமின் அரசரும், உன்னத கடவுளின் குருவுமாயிருந்த மெல்கிசெதேக் (ஆதி. 14:18) ஆணாக இருந்தார். கடவுளால் ஆரோன் வழியாக குருத்துவம் ஏற்படுத்தப்படுவதற்கு முன்பே இவர் குருவாயிருந்தார் என்று ஆதியாகமம் கூறுகிறது. அடுத்து யாத்திராகமம், பலியை நிறைவேற்றுகிற குருக்கள் பலிப்பொருட்களாகவும் இருக்க வேண்டும் என்பதைக் காட்டும் விதமாக, இஸ்ராயேலரின் பாஸ்காப் பலியான செம்மறிப்புருவை "**ஆண்பாலானதும்,** மாசு மறுவற்றதும், ஒரு வயதுள்ளதுமாக" இருக்க வேண்டியிருந்தது (யாத். 12:5). ஏனெனில் தாமே குருவாகவும், பலிப்பொருளாகவும் இருக்கும் சேசுநாதரின் அடையாளமாக இந்தச் செம்மறிப்புருவை இருந்தது.

இதன்பின் முறைப்படி அதிகார குருத்துவம் ஏற்படுத்தப்பட்டது. ஆரோனும், அவருடைய மூன்று புதல்வர்களும் இஸ்ராயேலின் முதல் குருக்களாகக் கடவுளின் கட்டளைப்படி மோயீசனால் அபிஷேகம் செய்யப்பட்டார்கள். இவர்களும் ஆண்களே. இவர்களுக்குப் பின் இஸ்ராயேலின் குருக்களாக ஆண்கள் மட்டுமே அபிஷேகம் செய்யப்பட்டார்கள்.

இறுதியாக, பெரிய வியாழனன்று புதிய உடன்படிக்கையின் குருத்துவம் நம் ஆண்டவரால் ஸ்தாபிக்கப்பட்டது. தமது அப்போஸ்தலர்கள் தம் மக்களின் ஞான அதிகாரிகளாக மட்டுமின்றி, கடவுளின் ஊழியர்களின் ஊழியர்களாகவும் (servus servorum Dei) இருக்க வேண்டுமென்று காட்டும்படியாகவும், அவர்களது "குருவும், ஆண்டவருமான" சேசுநாதர் அவர்களைக் குருக்களாக நியமிக்குமுன் அவர்களது பாதங்களைக் கழுவி, தாழ்ச்சியையும், பிறர்சிநேகத்தையும் அவர்களுக்குக் கற்றுத் தந்தார். பொதுத் திருச்சபையின் குருக்களாக ஏற்படுத்தப்பட்ட இவர்களும் ஆண்களே.

*உண்மையில், திவ்ய கன்னிகையும், தேவ தாயாருமான மகா பரிசுத்த மாமரியை விட இந்தக் குருத்துவத்திற்கு அதிகத் தகுதியுள்ளவர்களாக இருந்தவர்கள் யாருமில்லை. மாமரி சகல பாவங்களிலிருந்தும் விடுபட்டிருந்த மாசற்ற தாய்ச் செம்மறியாக இருந்தார்கள். அவர்களே முதன்முதலில் அவரை தேவாலயத்தில் பலியாக ஒப்புக்கொடுத்தபின் அவரை மீட்டுக்கொண்டார்கள். அவர்களே சிலுவையடியில் நின்று, தம்மையே பிதாவுக்கு ஒப்புக்கொடுத்துக் கொண்டிருந்த தன் திவ்ய சுதனோடு சேர்ந்து, அவரையும், அவரோடு தன்னையும் பலியாக ஒப்புக்கொடுத்தார்கள்.*

*ஆனால் நம் ஆண்டவர் தம்முடைய பொதுக் குருத்துவத்தில் திவ்ய கன்னிகைக்குப் பங்களிக்கவில்லை. காரணம் மிக எளியது. மாமரி ஒரு பெண்ணாக இருந்தார்கள், அவர்கள் குருவாக அல்ல, கிறீஸ்தவக் குருக்களின் தாயாக இருக்கவே நியமிக்கப்பட்டிருந்தார்கள்.*

*எனவே பெண் குருத்துவம் என்பது தேவ திருச்சித்தத்திற்கு முற்றிலும் எதிரானது. பெண்களுக்குக் குருத்துவ அந்தஸ்தைத் தர மறுப்பது பெண் அடிமைத்தனம் என்பது போலச் சித்தரித்துக் காட்ட திருச்சபையின் பகைவர்கள் தொடர்ந்து முயன்று வருகிறார்கள். இல்லவேயில்லை! திருச்சபை பெண்களைக் குருக்களாக ஏற்படுத்த முடியாது என்பதற்கான காரணம், அது தேவ சித்தம் அல்ல என்பதுதான். எனவே, பெண் குருத்துவத்தை வலியுறுத்துபவர்கள் கடவுளின் அதிகாரத்தையும், அவருடைய திருச்சித்தத்தையுமே கேள்வி கேட்கிறார்கள் என்பதே நிதர்சனம்.*

*இதனாலேயே, பெண்கள் பாதங்கழுவும் சடங்கில் பங்குபெறக்கூடாது என்று வலியுறுத்தப்படுகிறது. இங்கே ஒரு கேள்வி எழலாம்: பாதங்கழுவும் சடங்கில் குருக்களின் பாதங்கள் அல்ல, விசுவாசிகளின் பாதங்கள்தானே கழுவப்படுகின்றன? உண்மைதான். ஏனெனில், பெரிய வியாழனன்று நிகழ்த்தப்படும் இச்சடங்கு, திவ்ய நற்கருணை ஸ்தாபகத்தில் நிகழ்வது போல, முதல் பெரிய வியாழனன்று நடந்த திருச்சடங்கின் மறு நிகழ்வல்ல, அதன் அடையாளம் மட்டுமே. எனவே, இச்சடங்கில் குருக்களின் அடையாளமாக, சாதாரண விசுவாசிகள் பங்கு பெறுகிறார்கள்.*

*இங்கே பெண்கள் அவமதிக்கப்படவில்லை. மிக உன்னதமானதொரு பணி அவர்களுக்குத் தரப்பட்டுள்ளது என்பதை அவர்கள் மறக்கலாகாது. துறவறக் கன்னியர் தாங்கள் ஸ்தாபிக்கும் மடங்களின் வழியாகவும், தாங்கள் செய்யும் பிறர்சிநேகச் செயல்கள், மற்றும் தரித்திரம், கற்பு, கீழ்ப்படிதல் என்னும் வார்த்தைப்பாடுகளின்படி வாழும் புனித வாழ்வாலும், திருச்சபைக்கு ஒளியாகவும், மகிமையாகவும் இருக்கிறார்கள். மேலும், இல்லறமின்றித் துறவறமில்லை, மெய் விவாகமின்றி குருத்துவம் இல்லை. திருச்சபைக்குக் குருக்களைப் பெற்றுத் தருகிறவர்கள் என்னும் மாபெரும் பொறுப்பு பெண்களிடமே ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. இந்த வகையில், திருச்சபையின் ஜீவியத்தில் பெண்களும் ஓர் இன்றியமையாத பாகமாக விளங்குகிறார்கள். இந்தப் பணியில் அவர்கள் மகா பரிசுத்த கன்னிகையின் தெய்வீகத் தாய்மையிலேயே பங்கு பெறுகிறார்கள். இந்த உன்னதமான சலுகைக்காக அவர்கள் கடவுளுக்கு நன்றியுள்ளவர்களாக இருப்பார்களாக!*

---

## 33 நாள் தயாரிப்பு

அர்ச். லூயிஸ் மரிய மோன்போர்ட் காட்டியபடி, மரியாயின் மாசற்ற இருதயத்திற்கு முழு அர்ப்பண பக்தி 33 நாள் தயாரிப்பு ஆகும். இதன்படி இந்தத் தயாரிப்பு ஏப்ரல் மாதம் 28-ம் தேதியிலிருந்து ஆரம்பித்து, மே 30 -ம் நாள் முடிவடையும். மறு நாளாகிய தேவமாதா அரசியான திருநாளில் முழு அர்ப்பணம் செய்யப்பட வேண்டும். எனவே இதுவரையிலும் முழு அர்ப்பணத்தைச் செய்யாதவர்கள் பக்தியோடு அதைச் செய்யும்படியும், ஏற்கெனவே செய்தவர்கள் அதைப் புதுப்பித்துக் கொள்ளும்படியும் கேட்டுக் கொள்கிறோம்.

# கடவுளின் இருத்தல்

*(என் கத்தோலிக்க விசுவாசம் (My Catholic Faith) என்னும் புத்தகத்திலிருந்து எடுக்கப்பட்டது.)*

**இயற்கையிலிருந்து கடவுளின் இருத்தலை எப்படி அறிந்துகொள்கிறோம்?**



*1.* உலகத்தின் இருத்தல், *2.* பிரபஞ்சம் முழுவதிலும் நிலவும் ஒழுங்கு மற்றும் இணக்க நிலை மற்றும் *3.* நம் மனச்சான்றின் சாட்சியம் ஆகியவற்றின் வழியாக, கடவுள் இருக்கிறார் என்று இயற்கையின் வழியாக நாம் அறிந்துகொள்கிறோம்.

உலகத்தின் இருத்தல் கடவுள் இருக்கிறார் என்பதை நிரூபிக்கிறது. ஏனெனில் அது தானாகவே இருத்தலுக்கு வந்திருக்க முடியாது.

*1.* உலகத்தில் உள்ள ஒவ்வொன்றும் ஒரு தொடக்கத்தைக் கொண்டிருந்தது. மனிதர்கள், மிருகங்கள், தாவரங்கள், பூமி, கோள்கள், நட்சத்திரங்கள், ஆகிய அனைவரும், அனைத்தும் ஒரு தொடக்கத்தைக் கொண்டிருந்தார்கள். மனிதர்களும், மற்றவையும் தாங்களாகவே இருத்தலுக்கு வந்திருக்க முடியாது. அவை தொடக்கமில்லாதவராகிய ஒருவரால் உண்டாக்கப் பட்டிருக்க வேண்டும். ஒரு கைக்கடிகாரம் எப்படித் தன்னைத் தானே உருவாக்கிக்கொள்ள முடியாதோ, அவ்வாறே மனிதர்களும், கிரகங்களும் தங்களைத் தாங்களே உண்டாக்கிக் கொண்டிருக்க முடியாது.

விண்வெளி வீரரான கர்ச்சர் என்பவருக்கு, கடவுளின் இருத்தலை மறுத்த ஒரு நண்பன் இருந்தான். ஒரு நாள் அவர்கள் சந்தித்தபோது, இந்த நண்பன் அந்த விண்வெளி வீரரின் இல்லத்தில் ஓர் உலக உருண்டையைக் கண்டான். "இது நன்றாகச் செய்யப்பட்டிருக்கிறது. இதைச் செய்தவர் யார்?" என்று அவன் கேட்க, கர்ச்சர், "ஏன் கேட்கிறாய்? அது தானாகவே உருவானது!" என்று பதிலளித்தார். இதைக் கேட்டு அந்த நண்பன் மனம் விட்டுச் சிரித்தான். உடனே கர்ச்சர், "மிகப் பெரிய கிரகமாகிய பூமி தன்னைத்தானே உருவாக்கிக்கொள்வதைவிட, இந்தச் சிறு பூமியுருண்டை தன்னைத்தானே உருவாக்கிக்கொள்வது அதிக எளிதாகத்தானே இருந்திருக்கும்?" என்றார். நண்பன் பதில் சொல்ல முடியாமல் திகைத்து நின்றான்.

*2.* மணலில் காலடித் தடங்களை நாம் காணும்போது, யாரோ அந்த வழியாக நடந்து சென்றிருக்கிறார்கள் என்று நாம் புரிந்துகொள்கிறோம். பிரபஞ்சமோ தன்னைப் படைத்த உன்னதரின் காலடித் தடங்களால் நிறைந்திருக்கிறது. அவரது பதிவை நாம் மனிதனின் மனதில், அளவற்றவரின் மீதான அதன் ஆழ்ந்த நாட்டத்தில், கண்டுணர்கிறோம். கடவுள் என்பவர் இல்லை என்றால், மனிதனின் ஆழ்ந்த முயற்சிக்கு எந்தப் பலனுமிருக்காது, அது அபத்தமானதாக இருக்கும்.

பிரபஞ்ச ஒழுங்கும், இசைவும் கடவுள் இருப்பதை நிரூபிக்கின்றன, ஏனெனில் ஓர் உன்னதமான படைப்பாளரும், ஈடிணையற்ற திறமையோடு அதைப் பாதுகாப்பவருமான ஒருவர் இருக்கிறார் என்ற முடிவுக்கு அவை நம்மை இட்டுச் செல்கின்றன.

*1.* யுக யுகமாக, வான்கோள்கள் தங்களுக்குக் குறிக்கப்பட்ட வழித்தடங்களில் தொடர்ந்து பயணித்துக்கொண்டிருக்கின்றன. எல்லா இடங்களிலும் ஒளியும், அழகும், உத்தமமான அமைவும், ஒழுங்கும் இருக்கிறது. பிரபஞ்சம் முழுவதும் மாறாத சட்டம் ஒன்றால் ஆளப்பட்டு, பாதுகாக்கப்பட்டு வருகிறது.

ஓர் ஆரஞ்சு விதையை நீ விதைத்தால், அதிலிருந்து ஓர் ஆப்பிள் மரம் வளராது என்பதில் நீ உறுதியாயிருக்கிறாய். தினமும் காலையிலும், கிழக்கிலும் சூரியன் உதிக்கும் என்பதில் நீ உறுதியாயிருக்கிறாய். இரவில், உன் ஓய்வுக்குப் பிறகு மீண்டும் பொழுது விடியும் என்ற உறுதியோடு, சமாதானத்துடன் உறங்கச் செல்ல உன்னால் முடிகிறது.

*2.* இந்தப் பிரபஞ்ச ஒழுங்கு தற்செயலாக நிகழ்ந்தது என்றோ, அல்லது கோள்கள் தாங்களாகவே தங்கள் பாதையை வகுத்துக்கொண்டு இயங்குகின்றன என்றோ சொல்வது, ஒரு கார் தானாகவே ஊரைச் சுற்றி வருகிறது என்று சொல்வது போல, அடிமுட்டாள்தனமாக இருக்கும்!

"வானமண்டலங்கள் சர்வேசுரனுடைய மகிமையை விளக்கிக் கூறுகின்றன; ஆகாய விரிவு அவர் கரங்களின் கிரியைகளைக் காட்டுகிறது" (சங். *18:1*). சர்வேசுரன் (பிரபஞ்சத்தின்) புத்தியுள்ள காரணராக இருக்கிறார்.

*3.* முற்கால (அஞ்)ஞானியான சிசேரோ: "ஆகாய மண்டலங்களை நாம் ஆராயும்போது, அவை அனைத்தும் அளவற்ற திறமையுள்ள ஒரு ஜீவியரால் வழிநடத்தப்படுகின்றன என்று நாம் அறிய வருகிறோம்" என்றார். மாபெரும் வான சாஸ்திரியான நியூட்டன் கடவுளின் திருப்பெயர் உச்சரிக்கப்பட்டபோதெல்லாம் தொப்பியை அகற்றி, தாழ்ந்து வணங்கினார்.

**நம்முடைய மனச்சான்றின் சாட்சியம் எப்படிக் கடவுளின் இருத்தலை நிரூபிக்கிறது?**

நம்முடைய மனச்சான்றின் மூலம் நாம் தவறானதினின்று சரியானதைப் பிரித்தறிய முடிகிறது.

*1.* நம் மனச்சான்று சரியானதை அங்கீகரித்து, தவறானதைக் கண்டனம் செய்கிறது. இவ்வாறு, நாம் கீழ்ப்படிய கடமைப்பட்டுள்ள உன்னதரான சட்டமியற்றுபவர் ஒருவர் இருக்கிறார் என்றும், அவர் நாம் செய்யும் நன்மைக்குச் சம்பாவனை அளிப்பார் என்றும், தீயவர்களை அவர் தண்டிப்பார் என்றும் நமக்குள் நாம் ஏற்று அங்கீகரிக்கிறோம்.

*2.* அக, புற சாட்சியத்தையும் மீறி கடவுளின் இருத்தலைப் பிடிவாதமாக மறுப்போர் நாத்திகர் எனப்படுகிறார்கள். இவர்கள் பெரும்பாலும் தங்கள் ஆங்காரத்தால் குருடாக்கப் படுகிறார்கள். "அவர்கள் கண்டும் காணாமலும், கேட்டும் கேளாமலும், உணராமலுமிருக்கிறார்கள்... நீங்கள் காதாரக் கேட்டும், உணராதிருப்பீர்கள், கண்ணாரக் கண்டும், காணாதிருப்பீர்கள். ஏனெனில் இந்த ஜனம் ஒருவேளை கண்ணால் காணாமலும், காதால் கேளாமலும், இருதயத்தால் உணர்ந்து மனந்திரும்பாமலும், நான் அவர்களைக் குணப்படுத்தாமலும் இருக்கும்படியாக அவர்கள் இருதயமுங் கனத்துப்போய், கேட்கிறதில் காது மந்தமுள்ளவர்களாகி, தங்கள் கண்களையும் மூடிக் கொண்டார்கள்" (மத். *13:13-15*) என்னும் நம் ஆண்டவரின் வார்த்தைகள் இவர்களுக்குப் பொருந்துகின்றன.

# முதல் சனி பரிகார பக்தியின் நுட்ப விளக்கம்

*1.* **முதலாவது நுட்பம்:** ஆன்மாக்களின் இறுதி மீட்பிற்காக நமதாண்டவர் விதிக்கும் ஒரு நிபந்தனை: தம் திரு இருதயத்துக்கு இணையாக தம் அன்னையின் மாசற்ற இருதயத்தை நாம் வணங்கி வழிபட வேண்டும். அதற்கு நிந்தைப் பரிகாரம் செய்ய வேண்டும் என்பது.

மரியாயின் மாசற்ற இருதய பரிகார பக்தியின் எல்லை சேசுதான். மாதாவுக்குச் செய்யப்படும் ஒவ்வொரு நிந்தைப் பரிகார முயற்சியும் சேசுவின் திரு இருதயத்தையே சென்றடைகிறது. மாதாவிடம் எதுவும் நின்றுவிடுவதில்லை.

ஆனால் சேசு தம் அன்னையை எவ்வளவுக்கு மதித்து நேசிக்கிறாரென்றால், மாதாவின் மாசற்ற இருதயத்திற்கென்றே பாவப் பரிகாரங்கள் செய்யப்பட வேண்டுமென்று கேட்கிறார். மாதாவுக்குச் செய்யப்படும் அது தமக்கே செய்யப்பட்டதாக அங்கீகரிக்கிறார்.

இதை நாம் புரிந்துகொண்டு, மாதாவுக்குச் செய்வதெல்லாம் சேசுவுக்கே என்று தெளிந்து, மாதாவுக்கு மனத் தாராளத்துடனும், மிக்க நன்றியுடனும் பிள்ளைக்குரிய அன்புடனும் நம் ஜெபங்களையும் பரிகார முயற்சிகளையும் செய்ய வேண்டும்.

*2.* **இரண்டாவது நுட்பம்***:* முதல் சனிகளின் எண்ணிக்கை. முதல் சனி பக்தியை தொடர்ச்சியாக ஐந்து மாதங்களில் நாம் அனுசரிக்கும்படி சேசு கேட்டுக்கொண்டிருக்கிறார். எதற்காக ஐந்து? ஏன் ஏழு, ஒன்பது, மூன்று, அல்லது பதினைந்தாக அது குறிப்பிடப்படவில்லை?

ஐந்து என்றதுமே நமதாண்டவரின் ஐந்து திருக்காயங்களை நாம் நினைக்கிறோம். உயிர்த்த பின் ஆண்டவரின் மற்ற காயங்களெல்லாம் மாறி விட, ஆனால் அவரது கரங்களையும், கால்களையும் ஆணிகளால் அறைந்த காயங்களும், திருவிலாக் காயமும் அழியாமல் மகிமையுடன் பிரகாசிக்கின்றன.

இந்த ஐந்து காயங்களையும் மாதா நேரடியாய்க் கண்டார்கள். அவருடைய கைகளையும், கால்களையும் ஆணிகள் நிஷ்டூரமாய்த் துளைத்ததைக் கண்டு துடித்தார்கள். வலது கரத்தில் முதல் ஆணி அடிக்கப்பட்டபோது, சேசு வலி தாங்காமல் எழுப்பிய குரல் மாதாவை எவ்வளவு கொடூரமாய்ப் பாதித்ததென்று கண்ட ஆண்டவர், தாயின் இருதயத்தின் நோவை அதிகமாக்காதபடி அதற்கு மேல் எந்த வேதனைக் குரலையும் எழுப்பவில்லை. அவ்வளவு நுட்ப அன்புடன் அவர் தம் தாயை நேசித்தார். தம் ஐந்து காயங்களாலும் கிழித்துச் சிதைக்கப்பட்ட மாதாவின் மாசற்ற இருதயத்திற்கு ஆறுதலாக அவர் ஏற்படுத்திய முதல் சனி பக்தியும், அவற்றின் ஞாபகமாக ஐந்தாக இருக்க வேண்டும் என்பது எவ்வளவு பொருத்தமானது!

*3.* **மூன்றாவது நுட்பம்***:* ஈட்டியால் ஆண்டவரின் திருவிலா குத்தப்பட்டபோது, அவரது சரீரம் அதை உணரவில்லை. அவர் ஏற்கெனவே இறந்துவிட்டார். உயிரற்ற சரீரத்தில் பட்ட காயம் என்பதற்காக அது மாதாவின் மாசற்ற இருதயத்தை வேதனைப்படுத்தாமல் விடவில்லை. செத்த பிறகும் அவருடைய சரீரம் துளைக்கப்பட்டது கண்டு மாதா கொடூர வேதனைப்பட்டார்கள்.

ஐந்து முதல் சனி பக்தியின் கருத்துகளில் ஐந்தாவது கருத்து: மாதாவின் புனிதப் பொருட்கள் பழிக்கப்படுவதற்குப் பரிகாரம் செய்வதாகும். மாதாவின் சுரூபங்கள், படங்கள், ஜெபமாலை போன்ற பக்திப் பொருட்கள் உயிரற்றவையே. மற்ற நான்கு கருத்துக்களில் முதல் மூன்று கருத்துகளும் உயிருள்ள மாதாவை நேரடியாகக் குறிக்கின்றன. நான்காவது கருத்தும் உயிருள்ள இளம் உள்ளங்களில் மாதா பக்தியை அழிப்பதாக இருக்கின்றது. ஐந்தாவது கருத்துதான் உயிரற்ற பொருள்களைக் குறிக்கிறது. உயிரற்ற சேசுவின் திருச்சரீரத்தில் ஏற்பட்ட ஐந்தாவது காயத்தினால் மாதாவுக்கு ஏற்பட்ட வேதனைக்குப் பரிகாரம் செய்வதாக இது அமைகிறது. இந்த நுட்பங்கள் நம் பரிகார பக்தி முயற்சிகளுக்கு உதவுவனவாக இருக்கட்டும்.

*மரியாயே வாழ்க!*

# அர்ச். லூயிஸ் மரிய மோன்ஃபோர்ட்



அர்ச். லூயிஸ் *1673*-ல் மோன்போர்ட் என்ற ஊரில் பிறந்தார். அவரது பெற்றோர் ஷான் பாப்டிஸ்ட், ஷான் ராபர்ட் க்ரிஞ்ஞோன் ஆகியோர் ஆவர். இவர்களது *18* பிள்ளைகளில் இவரே மூத்தவர். தம் தந்தையின் பண்ணை இருந்த இஃபெந்திக் என்னும் ஊரில் லூயிஸ் தம் குழந்தைப் பருவத்தைக் கழித்தார். *12* வயதில், ரென்னே நகரத்திலிருந்த சேசு சபையின் அர்ச். தாமஸ் பெக்கெட் கல்லூரியில் சேர்ந்தார். சாதாரணப் பள்ளிப் படிப்பை முடித்தபின், அதே கல்லூரியில் தத்துவ சாஸ்திரமும், வேதசாஸ்திரமும் கற்கத் தொடங்கினார்.

சுவாமி ஜூலியன் பெல்லியே என்பவரின் வேதபோதக வரலாறு, ஏழைகள் மத்தியில் வேதபோதகப் பணியாற்ற லூயிஸைத் தூண்டியது. இந்தக் குருதான் முதன்முதலில் மாமரிக்கு முழு அர்ப்பண பக்தியின் விதையை லூயிஸின் மனதில் விதைத்தவர் ஆவார். அவரது வழிகாட்டுதலில் லூயிஸ் தேவமாதாவின் பேரில் தாம் கொண்ட பக்தியில் வளர்ச்சி பெற்றார்.

பாரிஸின் புகழ்பெற்ற அர்ச். சூல்பிச்சே குருமடத்தில் சேர விரும்பி, *1693* இறுதியில் பாரிஸுக்கு வந்த லூயிஸ் மிக வறியவர்கள் மத்தியில் தரித்திர வாழ்வு வாழ்ந்து கொண்டே, ஸார்போன் பல்கலைக்கழகத்தில் வேதசாஸ்திர வகுப்புகளில் கலந்துகொண்டார். இரண்டு வருடங் களுக்குள் மிக மோசமாக நோயுற்று மருத்துவமனையில் சேர்க்கப்பட்டு குணம் பெற்றார். *1695* ஜூலையில் அர்ச். சூல்பிச்சே குருமடத்தில் மீண்டும் சேர்ந்தார். அதன் நூலகர் பணி அவருக்குத் தரப்பட்டது. அது நிறைய ஞான நூல்களையும், மாதா பற்றிய நூல்களையும் வாசிக்க அவருக்கு வாய்ப்பளித்தது. சம்மனசுக்கள் மீதும் லூயிஸ் விசேஷ பக்தி கொண்டிருந்தார். தமது காவல் தூதரை வாழ்த்தும் ஒரு வாக்கியத்தோடுதான் அவர் தம் கடிதங்களை எப்போதும் முடித்தார்.

லூயிஸ் *1700*-ல் குருவாக அபிஷேகம் பெற்றார். வெளி நாடுகளில், குறிப்பாக கனடாவின் பிரெஞ்ச் குடியேற்றப் பகுதியில் வேதபோதகப் பணி அவரது பெரும் விருப்பமாக இருந்தது. *1700* நவம்பரில் அவர் அர்ச். சாமிநாதர் மூன்றாம் சபையில் சேர்ந்து, ஜெபமாலை பற்றிப் போதிக்கவும், ஜெபமாலை பக்த சபைகளை நிறுவவும் அனுமதி பெற்றார். மேலும் திவ்ய கன்னிகையின் பாது காவலின் கீழ் வேதபோதக பிரசங்கங்களும், தியானப் பயிற்சிகளும் தரும் ஒரு சிறு சபையை ஸ்தாபிக்கவும் அவர் விரும்பினார். இதுவே மரியாயின் சபையை நிறுவ அவரைத் தூண்டியது.

உரோமைக்குச் சென்று, தமது வேதபோதக விருப்பத்தைப் பற்றிப் பாப்பரசர் *11*-ஆம் கிளமெண்ட்டிடம் லூயிஸ் அறிவுரை கேட்க, பாப்பரசர் பிரான்ஸிலேயே அதைச் செயல்படுத்த நிறைய வாய்ப்பிருப்பதை விளக்கி, அப்போஸ்தலிக்க வேதபோதகர் என்ற பட்டமும் தந்து அவரை அனுப்பி வைத்தார். திரும்பி வந்தவுடன், "கடவுளுக்காக ஆத்துமங்களை வெற்றிகொள்ளத் தேவை யான வரப்பிரசாதத்தை அர்ச். மிக்கேல் அதிதூதர் தமக்குப் பெற்றுத் தரவும், ஏற்கெனவே வரப் பிரசாதத்தில் இருப்பவர்களை உறுதிப்படுத்தி, சாத்தானுக்கும், பாவத்திற்கும் எதிரான போரில் அவர்களை வலுப்படுத்தவும் அவரிடம் ஜெபிக்கும்படியாக," அர்ச். மிக்கேல் மலையில் தியானப் பயிற்சிகளில் பங்கேற்றார். இவை தியானிக்கவும், நிறைய எழுதவும் அவருக்கு நேரம் தந்தன.

லூயிஸ் பிரிட்டனியிலும், நாந்த்தேயிலும் சில வருடங்களாக வேதபோதகப் பிரசங்கங்களை நிகழ்த்தி வந்தார். போந்த்ஷாட்டு என்னுமிடத்தில் அவரது தூண்டுதலால் நூற்றுக்கணக்கானோர் ஒரு

மிகப் பெரிய கல்வாரியை அமைத்தார்கள். ஆயினும், ஜான்சனியப் பதிதர்கள் சிலரின் செல்வாக்கின் கீழ் பிரான்ஸ் அரசனின் உத்தரவின்கீழ் அது இடிக்கப்படப் போகிறது என்று அறிந்த ஆயர், அது மந்திரிக்கப்படுவதைத் தடை செய்தார். இது லூயிஸுக்கு ஏமாற்றம் தந்தாலும், "சர்வேசுரன் ஸ்துதிக்கப்படுவாராக" என்று சொல்லி இச்செய்தியை அவர் ஏற்றுக்கொண்டார்.

தம் இறுதிக் காலத்தில் அவர் பல இடங்களுக்கு நடந்தே சென்று, வேதபோதகப் பிரசங்கங்கள் ஆற்றி வந்தார். இச்சமயத்தில்தான் அவர் தமது புகழ்பெற்ற "மரியாயின் மீது உண்மை பக்தி," "மரியாயின் இரகசியம்," "ஜெபமாலை இரகசியம்" என்ற நூல்களையும், மரியாயின் சபை மற்றும் ஞானத்தின் புதல்வியர் சபையின் சட்டத் தொகுப்புகளையும், பல பாடல்களையும் எழுதினார். பதிதர்கள் ஒரு முறை அவரை விஷம் வைத்துக் கொல்ல முயன்றார்கள். அதில் அவர் உயிர் தப்பினாலும், அது அவரது உடல் நலத்தை வெகுவாகப் பாதித்தது. ஆயினும் அயராமல் உழைத்த அவர், தாம் போதிக்கச் சென்ற ஊர்களில் ஏழைச் சிறுவர் சிறுமியருக்கு இலவசப் பள்ளிகளை ஸ்தாபித்தார்.

லா ரோஷெல்லின் ஆயர் தம் மேற்றிராசனத்தில் ஒரு பள்ளியைத் திறக்க புனிதரை அழைத்தார். லூயிஸ் புவாட்டியேயில் பொது மருத்துவமனை நடத்தி வந்த தமது சீடப் பெண்ணான மரீ லூயிஸ் த்ரிஷே என்பவளின் உதவியை நாட, 1715ல் அவள், கேத்தரீன் ப்ரூனே என்பவளின் உதவியோடு லா ரோஷெலில் ஒரு பள்ளியைத் தொடங்கினாள். மிக விரைவில் அதில் 400 மாணவர்கள் சேர்ந்தார்கள்.1715 ஆகஸ்ட் 22 அன்று இந்த இரு பெண்களும், மரீ வால்லோ, மரீ ரெஞ்ஞியே என்ற வேறு இரு பெண்களோடு லா ரொஷெலின் ஆயரின் அங்கீகாரத்தோடு, லூயிஸின் வழிகாட்டுதலின் கீழ் தங்கள் துறவற வார்த்தைப்பாடுகளைத் தந்தார்கள். லூயிஸ் அவர்களுக்கு ஞானத்தின் புதல்வியர் என்று பெயர் சூட்டினார். இந்தச் சபை ஒரு சர்வதேச சபையாக வளர்ச்சி பெற்றது.

தமது 16 வருட குருத்துவ வாழ்வில், லூயிஸ் நான்கு வருடங்களை, அழகான ஒரு காட்டுப் பகுதியில், மெர்வெந்த் குகையில் வனவாசத்தில் கழித்தார். கடின உழைப்பாலும், நோயாலும் தளர்ந்து போன அவர், 1716 ஏப்ரலில் இறுதியாகத் தமது கடைசி வேதபோதகப் பிரசங்கங்களைத் தருவதற்காக அர்ச். லாரோந்த்-சுர்-ஸெவ்ரேக்கு வந்தார். அங்கே இருந்தபோது, நோய் முற்றி, ஏப்ரல் 28 அன்று, தமது 43ஆம் வயதில் மரணமடைந்தார். பங்கு ஆலயத்தில் அவரது அடக்கம் செய்யப்பட்டார். அங்கே பல புதுமைகள் நிகழத் தொடங்கின.

அர்ச். லூயிஸின் "மாமரிக்கு முழு அர்ப்பணச் செயல்முறையானது," மாமரிக்கும், அவர்கள் வழியாக சேசுவுக்கும் ஒருவன் தன்னை அடிமையாக அர்ப்பணிப்பதிலும், "மாமரியோடும், மாமரியிலும், மாமரியின் வழியாகவும், மாமரிக்காகவும்" அனைத்தையும் செய்வதிலும் அடங்கியுள்ளது. மரியாயின் பக்த சபைகளில் அல்லது துறவற சபைகளில் சேருதல், மாமரியின் வரப்பிரசாதச் சலுகைகளை உலகம் அறிந்து, மதிக்கச் செய்வதற்காக உழைத்தல், மாமரிக்குத் தோத்திரமாக ஏழைகளுக்கு உதவுதல் என்பவை இந்த பக்தியின் வெளி அம்சங்களாகும். தன்னை அறிதல், தேவ மாதாவை அறிதல், சேசுநாதரை அறிதல் என்னும் தலைப்புகளில், 33 நாட்கள் இந்த அர்ப்பணத்தைச் செய்வதற்காக புனிதரின் முறைப்படி தங்களை ஆயத்தம் செய்து, தங்களை மாமரியின் வழியாக சேசுவுக்கு முழு அர்ப்பணம் செய்வதே இந்த முழு அர்ப்பண பக்தியாகும். இந்த பக்தியை அனுசரிப்பவர்களே மாதாவின் அப்போஸ்தலர்கள் ஆவர்.

லூயிஸுக்கு 1888ஆம் ஆண்டில் 13-ஆம் சிங்கராயர் முத்திப்பேறு பட்டம் வழங்கினார்; 1947, ஜூலை 20 அன்று பாப்பரசர் 12-ஆம் பத்திநாதர் அவருக்கு அர்ச்சியசிஷ்ட பட்டம் வழங்கினார். திருநாள்: ஏப்ரல் 28.



# மாதாவின் சூசை அச்சக புத்தக டிப்போவில் கிடைக்கும் ஞானப் புத்தகங்கள்



Cell: 94876 09983 Landline: 0461 2361989

| | | விலை ரூ. | தபாலில் விலை ரூ. |
|---|---|---|---|
| 1 | பாரம்பரிய திருக்குடும்ப பக்திமாலை | 220.00 | |
| 2 | உலகின் இறுதிக் காலங்கள் | 125.00 | |
| 3 | திருப்பாடுகளின் வரலாறு | 150.00 | |
| 4 | அனுதின ஜெபப் புத்தகம் | 50.00 | |
| 5 | திருப்பாடுகளின் தியானம் | 90.00 | |
| 6 | அறிவோம் பத்துக் கட்டளைகள் | 100.00 | |
| 7 | மலைமேல் பிரசங்கம் | 65.00 | |
| 8 | அறிவோம் அப்போஸ்தலர்களை: அர்ச். பிலவேந்திரர் | 90.00 | |
| 9 | ஞான உபதேசக் கோர்வை (3 பாகங்கள் அடங்கியது) | 325.00 | |
| 10 | மன்ரேசா (அர்ச். இஞ்ஞாசியாரின் தியானப் பிரசங்கங்களின் தொகுப்பு | 125.00 | |
| 11 | கிறீஸ்துநாதர் அநுசாரம் | 250.00 | |
| 12 | மரியாயின் மீது உண்மை பக்தி | 125.00 | |
| 13 | பாத்திமா காட்சிகள் | 100.00 | |
| 14 | பாவசங்கீர்த்தனத்தின் இரகசியம் | 60.00 | |
| 15 | சேசுவின் திருநாமத்தின் அதிசயங்கள் | 35.00 | |
| 16 | கற்பு என் பொக்கிஷம் | 60.00 | |
| 17 | என்னைப்படி அல்லது வருத்தப்படு (உத்தரிக்கிற ஆன்மாக்கள் பற்றியது) | 30.00 | |
| 18 | ஞான உணர்த்துதல் | 40.00 | |
| 19 | Read Me or Rue It | 60.00 | |
| 20 | என்னைப் படிக்காவிட்டால் வருத்தப்படுவாய் | 80.00 | |
| 21 | கத்தோலிக்க வேத சத்தியங்கள் | 45.00 | |
| 22 | இதுதான் பாத்திமா செய்தி, இதுவே பரிகார பக்தி | 35.00 | |
| 23 | ஞான சரீரம் | 35.00 | |
| 24 | சலேத் இரகசியம் | 35.00 | |
| 25 | மரியாயின் இரகசியம் | 30.00 | |
| 26 | தேவ இரகசிய ரோஜா மாதா காட்சிகள் | 30.00 | |
| 27 | The Penny Catechism | 35.00 | |
| 28 | அமலோற்பவ மாமரியின் போரணி | 40.00 | |
| 29 | அன்னையை நேசிக்கப் பன்னிரு படிகள் | 30.00 | |
| 30 | மரியாயின் மாசற்ற இருதய பரிகார பக்தி முயற்சிகள் | 35.00 | |
| 31 | முத்துக்குளித் துறையின் முதல் ஆயர் (வந். ரோச் ஆண்டகையின் வரலாறு) | 30.00 | |
| 32 | மோட்சம், நரகம், உத்தரிக்கிற ஸ்தலம் | 35.00 | |
| 33 | வியாகுல மாதா பக்தி | 35.00 | |
| 34 | தலை வெள்ளி, முதல் சனி பக்தியும், ஜெபமாலையும் அனுசரிக்கும் முறை | 20.00 | |
| 35 | உத்தரிக்கிற ஸ்தலத்துக்கு அனுதின யாத்திரை | 15.00 | |
| 36 | காவல் சம்மனசானவர் | 10.00 | |
| 37 | சிலுவைப் பாதை | 15.00 | |
| 38 | பரிசுத்த ஆவி ஜெபம் | 6.00 | |
| 39 | சேசுவின் திரு இருதய மந்திரமாலை | 6.00 | |
| 40 | தேவமாதாவின் மந்திரமாலை | 10.00 | |
| 41 | அர்ச். சூசையப்பர் பக்தி மாலை | 15.00 | |
| 42 | அர்ச். சூசையப்பர் மகத்துவங்கள் | 60.00 | |
| 43 | ஆதித் திருச்சபையின் பத்து வேத கலாபனைகள் | 10.00 | |
| 44 | திருச்சபையின் கட்டளைகள் (சிறிய விளக்கத்துடன்) | 10.00 | |
| 45 | சேசுவின் இரக்க பக்தி | 10.00 | |
| 46 | அர்ச். பிலோமினம்மாள் ஜெபப் புத்தகம் | 10.00 | |
| 47 | தேவ அழைத்தல்கள் | 35.00 | |
| 48 | சின்னக் குறிப்பிடம் | 10.00 | |

| | | விலை ரூ. | தபாலில் விலை ரூ. |
|---|---|---|---|
| 49 | அன்பிரவு (பரிகாரத் திருமணி ஜெபப் புத்தகம் | 25.00 | |
| 50 | மனச் செபம் ஒரு விளக்கம் | 35.00 | |
| 51 | புதுநன்மைப் புனிதை (முத்திப்பேறு பெற்ற இமெல்டா வரலாறு) | 70.00 | |
| 52 | பரலோக எச்சரிப்பு (2 புத்தகங்களின் தொகுப்பு -Fr. அந்தோனி சேவியர் தொகுத்து எழுதியது | 60.00 | |
| 53 | ஜெபமாலையின் இரகசியம் (அர்ச். லூயிஸ் மோன்போர்ட் எழுதியது) | 100.00 | |
| 54 | மரியாயின் மாசற்ற இருதய வெற்றியின் உதயம் | 35.00 | |
| 55 | 33 நாள் தயாரிப்பு: மாதாவுக்கு முழு அர்ப்பணம் செய்யும் முறை (தியானங்களுடன்) | 70.00 | |
| 56 | இறுதிக் கால யுகம் | 100.00 | |
| 57 | அர்ச். பத்தாம் பத்திநாதர் வாழ்க்கை வரலாறு | 100.00 | |
| 58 | புதுமைப் புனிதர் தந்தை பியோ | 200.00 | |
| 59 | வேத விளக்கம் (வீரமாமுனிவர் (சங்.ஜோசப் பெஸ்கி, சே.ச.) எழுதியது | 150.00 | |
| 60 | அன்பின் அரசர் | 150.00 | |
| 61 | நரகம் | 60.00 | |
| 62 | அர்ச். ரீத்தம்மாளின் ஜீவிய சரித்திரம் | 13.00 | |
| 63 | அர்ச். சிலுவை அருளப்பர் வாழ்க்கை வரலாறு | 80.00 | |
| 64 | நரக சத்தியம் | 70.00 | |
| 65 | தேவமாதாவின் பிரார்த்தனை விளக்கம் | 150.00 | |
| 66 | மரியாயின் மகிமைகள் | 170.00 | |
| 67 | புதிய நட்சத்திரம் பிலோமினா | 60.00 | |
| 68 | அர்ச். பாஸி மரிய மதலேனாள் | 85.00 | |
| 69 | அர்ச். ஜெர்த்ரூத்தம்மாள் | 45.00 | |
| 70 | ஜெபமாலை ஜெபிப்பது எப்படி? | 10.00 | |
| 71 | A Brief History of St. Mary Magdalene de Pazzi, Carmelite and Mystic | 50.00 | |
| 72 | புனித தெரேசம்மாள் சரித்திரம் | 160.00 | |
| 73 | கடவுள் மனிதனின் காவியம் (முதல் பாகம்) | 350.00 | |
| 74 | கடவுள் மனிதனின் காவியம் (இரண்டாம் பாகம்) | 350.00 | |
| 75 | கடவுள் மனிதனின் காவியம் (மூன்றாம் பாகம்) | 550.00 | |
| 76 | கடவுள் மனிதனின் காவியம் (நான்காம் பாகம்) | 200.00 | |
| 77 | கடவுள் மனிதனின் காவியம் (ஐந்தாம் பாகம்) | 350.00 | |
| 78 | கடவுள் மனிதனின் காவியம் (ஆறாம் பாகம்) | 350.00 | |
| 79 | கடவுள் மனிதனின் காவியம் (ஏழாம் பாகம்) | 550.00 | |
| 80 | கடவுள் மனிதனின் காவியம் (எட்டாம் பாகம்) | 550.00 | |
| 81 | கடவுள் மனிதனின் காவியம் (ஒன்பதாம் பாகம்) | 550.00 | |
| 82 | கடவுள் மனிதனின் காவியம் (பத்தாம் பாகம்) | 550.00 | |

## அன்பான வாசகர்களின் கவனத்திற்கு

1. மாதா பரிகார மலர் ஆண்டு சந்தாவை இன்னும் புதுப்பிக்காதவர்கள் உடனே அதைப் புதுப்பித்து, நம் பத்திரிகை நல்ல முறையில் வெளிவர எங்களுக்கு உதவும்படி அன்புடன் கேட்டுக்கொள்கிறோம். வருட சந்தா ரூ. 150/- கூடுதல் தபால் செலவு ஆகிறது. நேயர்கள் உதவி செய்யும்படி அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.உங்கள் ஆன்ம சரீர நன்மைகளுக்காக தினமும் எங்கள் ஜெபங்களில் வேண்டிக்கொள்கிறோம்.

2. மாதா பரிகார மலர் சந்தா, காணிக்கை மற்றும் புத்தகங்களுக்கு மட்டும் கீழ்க்கண்ட பெயரில் நீங்கள் மணியார்டர்கள், D.Ds மற்றும் காசோலைகளை அனுப்புங்கள்.

A/c Name: SOCIETY OF APOSTLES OF MARY
No. 31423199505 - IFS Code: SBIN 0008145
State Bank of India, Kanthasamypuram Branch, Tuticorin.

**அனுப்ப வேண்டிய முகவரி**

**மாதா அப்போஸ்தலர்கள் சபை, ரோஸா மிஸ்திக்கா,**
**11/519 சகாயமாதா பட்டணம், 2-வது தெரு, வி.வி.டி. பள்ளி எதிரில், தூத்துக்குடி - 628 002.**
**போன் : 0461 2361989, அலைபேசி: 94876 09983. Email: tutirosamystica@gmail.com**
**சந்தா நன்கொடை செலுத்த: Google Pay: 94876 09983.**

**நமது மாதா அப்போஸ்தலர்கள் சபைக்கு அனுப்பும் நன்கொடை மற்றும் காணிக்கைக்கு வரிச் சலுகை பெற்றுக்கொள்ள ரசீது (80G - AAJTS6976JF20215) பெற்றுக்கொள்ள முடியும்.**

**சேசு மரியாயில் அன்புள்ள நண்பர்களே, உபகாரிகளே,**

நமது உலக ஜெயராக்கினி மாதா ஆலய கட்டட வேலைகள் கடந்த ஆறு ஆண்டுகளாக நடந்து வருகின்றன. சேசுவின் திரு இருதயத்திற்கும் (திவ்ய நற்கருணைக்கும்), மேலும், தேவ மாதா பாத்திமாவில் கேட்டுக்கொண்டபடி மரியாயின் மாசற்ற இருதய பரிகார பக்திக்கென்றும் இந்த ஆலயத்தை மிகுந்த முயற்சியுடன், உபகாரிகளின் உதவியினால் கட்டி வருகிறோம். தேவையான உதவிகள் கிடைக்காமையால் இக்கட்டட வேலைகள் இன்னும் முடியவில்லை. நமது உலக ஜெயராக்கினி மாதா ஆலயத்தை முழுமையாகக் கட்டி முடிக்க கீழ்க்கண்ட வகைகள் தேவைப்படுகின்றன:

| | | |
|---|---|---|
| 01. | ரூஃப் (Roof) & கான்கிரீட் & சென்டரிங் கூலி | ரூ. 30,00,000.00 |
| 02. | பீடத்தின் மேல் (Center) டவர் கான்கிரீட் & சென்டரிங் கூலி | ரூ. 9,00,000.00 |
| 03 | ஆலயத்தின் உள்பக்கம் & வெளிப்பக்கம் பூசுவதற்கு பொருட்கள் (Finishing materials) & கூலி | ரூ. 10,00,000.00 |
| 04. | ரூஃப் மேல் பக்கம் & உள்பக்கம் பூசுவதற்குப் பொருட்கள் (Finishing materials) & லேபர் கூலி | ரூ. 12,50,000.00 |
| 05. | கூரை ஓடு பதிக்கப் பொருட்கள் & லேபர் கூலி | ரூ. 7,00,000.00 |
| 06. | ஆலயத்தின் முன் கோபுரம் (Front Tower) கட்டுவதற்கு பொருட்கள் (Finishing materials) & லேபர் கூலி | ரூ. 7,50,000.00 |
| 07. | குருக்கள் தங்கும் இல்லத்திற்கு உள்பக்கம், வெளிப்பக்கம் பூசுவதற்கு பொருட்கள் (Finishing materials) & லேபர் கூலி | ரூ. 1, 05,000.00 |
| 08. | தேக்கு மரம் நிலை & கதவு 9, ஜன்னல் 14, லேபர் & வுட் பாலிஷ் | ரூ. 17,50,000.00 |
| 09. | தரைக்கு வெள்ளை மார்பிள் கல் & லேபர் கூலி | ரூ. 24,00,000.00 |
| 10. | எலெக்ட்ரிக்கல் சாமான்கள், (Fittings)விளக்குகள் & லேபர் கூலி | ரூ. 6,00,000.00 |
| 11. | ஆலயம் முழுவதற்கும் வர்ணம் பூச பொருட்கள் & லேபர் கூலி | ரூ. 12,00,000.00 |
| 12. | கண்ணாடி ஓவியங்கள் வேலை | ரூ. 9,00,000.00 |
| 13. | திவ்ய பலிபூசை நிறைவேற்ற முக்கிய பீடம் (தேக்கு மர வேலை) | ரூ. 9,25,000.00 |
| 14. | பீடத்தின் இரு புறமும் (Altar Sides) தேக்கு மர வேலை | ரூ. 7,00,000.00 |
| | ஆலயம் கட்டி முடிக்கத் தேவையான மொத்தத் தொகை | ரூ.1,61,80,000.00 |

இந்த ஆலயத்தைக் கட்டி முடிக்க மாதாவின் அன்புப் பிள்ளைகள் தங்களால் முடிந்த உதவி அளிக்குமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

**வங்கி விபரம்:**

**A/c Name : Society of Apostles of Mary**
**A/c No. : 1218000000473**
**IFS Code : IOBA0001218**
**Indian Overseas Bank,**
**Mappillaiyurani Branch,**
**Thoothukudi.**
**For Tax exemption: 80G - AAJTS6976JF20215**

இவண்,
மாதா அப்போஸ்தலர்கள் சபை மற்றும்
மாதா அப்போஸ்தலர்கள்
முகவரி:
மாதா அப்போஸ்தலர்கள் சபை,
11 / 519, சகாயமாதா பட்டணம், 2-வது தெரு,
தூத்துக்குடி - 628 002. போன்: 0461 2361989
அலைபேசி: 94876 09983 / 94872 57479
Email: tutirosamystica@gmail.com

# உலக ஜெயராக்கினி மாதா ஆலயம்



ஆலயத்தின் முழுத்தோற்றம்



கட்டிடப் பணி நடைபெறும் ஆலயத்தின் தோற்றம்

---

**முகவரி**

மாதா அப்போஸ்தலர்கள் சபை,
(Society of Apostles of Mary)
11/519, சகாயமாதாபட்டணம்,
2வது தெரு, தூத்துக்குடி – 628 002.
தொலைபேசி: 0461 2361989
அலைபேசி: 94876 09983, 94872 57479
E-mail: tutirosamystica@gmail.com

**வங்கி விபரம்**

Account Name:
Society of Apostles of Mary
Account No. 121802000000473
IFS Code: IOBA0001218
Indian Overseas Bank,
Mappillaiyurani Branch,
Thoothukudi.



**மே – ஜூன் மாதங்களின் முதல் சனி பக்தி முயற்சியின் பரிகாரக் கருத்துக்கள்**

மே : தேவமாதாவின் பக்திப் பொருட்களை அவமதித்து அகற்றும் நிந்தைகளுக்குப் பரிகாரமாக ..

ஜூன் : ஐந்து நிந்தைகளுக்கும் சேர்த்துப் பரிகாரமாக ..

மாதா பரிகார மலரில் விசுவாசத்திற்கோ, நல்லொழுக்கத்திற்கோ, கத்தோலிக்க திருச்சபைக்கோ அதன் போதனைகளுக்கோ உண்மையான பக்திக்கோ மாறுபாடான எந்தக் கருத்தும் வெளிவராது.

– மாதா பரிகார மலர் குழு

**MATHA PARIKARA MALAR**
**ROSA MYSTICA**
**(Opp. V.V.D. H. Sec. School)**
**SAHAYAMATHAPATTANAM**
**TUTICORIN - 628 002.**
**PH: 0461 - 2361989**
**Cell: 94876 09983**
E-mail: tutirosamystica@gmail.com

மாதா பரிகார மலர்
ரோஸா மிஸ்திக்கா
வி.வி.டி. மேல்நிலைப்பள்ளி எதிரில்,
சகாயமாதாபட்டணம்
தூத்துக்குடி மேலூர் போஸ்ட் – 628 002
போன்: 0461 – 2361989
அலைபேசி: 94876 09983

To

Printed, Published and owned by: S. Michael Joseph Kennedy , Managing Trustee cum Secretary of Society of Apostles of Mary & Keeper of Mathavin Susai Achagam (Printing Press), 11/519, 2nd Street, Sahayamathapattanam, Melur (P.o), Tuticorin District, Tamil Nadu.

Printed at: Mathavin Susai Achagam (Printing Press), C/o, Society of Apostles of Mary, D.No 11/510, 2nd Street, Sahayamathapattanam, Melur (P.o), Tuticorin - 628 002. Tuticorin Dist., Tamil Nadu.

Published at: Society of Apostles of Mary, 11/510-1, Rosamystica 2nd Street, Sahayamathapattanam, Melur (P.o), Tuticorin - 628 002. Tuticorin Dist., Tamil Nadu.

Editor: Sammanasu Navis, C/o, Society of Apostles of Mary, 11/519, 2nd Street, Sahayamathapattanam, Melur (P.o), Tuticorin - 628 002. Tuticorin Dist., Tamilnadu.